தனிப்பிரதி 1 அணா   வருட சந்தா ரூ. 5.   REGD. NO. M. 4455.

# திராவிடநாடு

ஞாயிறு வெளியீடு.

ஆசிரியர்
C. N. அண்ணாதுரை M. A.,

"நனியுண்டு நனியுண்டு—காதல்-தமிழ்
நாட்டினர் யாவர்க்குமே தமிழ் மீதில்"

[கவி பாரதி தாசன்.]

மலர் 1. ‖ காஞ்சிபுரம் 24—5—42 சித்திரபானு—வைகாசி 11உ ஞாயிறு ‖ இதழ் 12

## பெரியார் ஆச்சாரியார் சந்திப்பு!

பரதன்.

"வாங்கோ! வாங்கோ! வணக்கம்! டே! சங்கரய்யா, அந்த மாலையை எடு இப்படி!"

"அதெல்லாம் வேண்டாம். சௌக்கியந்தானே! உடம்பு இளைத்த மாதிரி இருக்கே, என்ன விஷயம்."

ஒன்றுமில்லை. வெய்யில் கஷ்டந்தான்! காப்பி சாப்பிடுங்கோ முதலிலே. கோயம்புத்தூரிலிருந்து தானே வருகிறீர்."

ஆமாம்! நல்ல கூட்டம். எல்லா உங்க ஆட்கள் தான்! பரமதிருப்தி அவாளுக்கு. பெரியார் பேசுவதற்கும் இவர் பேசுவதற்கும்வித்தியாசமே காணோமே என்று சொன்னார்கள்.

வேடிக்கைதான்! உங்களாட்டம், என்னால் முடிகிறதா பேச. நீங்க ஆர்குமெண்டாகப் பேசுவீர்கள்.

ஆர்குமெண்ட் பூராவும், நீங்கள் ஏற்கனவே தயாரித்ததுதான், புதுசா ஒண்ணுமில்லை.

பத்திரிகையிலே படிச்சேன்.

நான் பேசினது சரிதானே. குடும்பத்திலே சொத்து பிரித்துக்கொள்ள வேண்டுமென்று பிள்ளை சொன்னால், பிரிக்காமே இருக்கமுடியுமோ. இது தெரியாமே இந்த சத்தியமூர்த்திக் கூட்டம் எதிர்க்கிறது.

இதென்ன எதிர்ப்பு! உங்கள்பேச்சு, இந்து, மித்திரன், கல்கி, இவ்வளவு பத்திரிகைகளின் ஆதரவு, இவைகளை எதிர்த்து அவர்கள் என்ன செய்யமுடியும்.

என்னத்தைச் செய்வா! ஜவர்லாலை அழைப்பா. அவன் வந்து கத்துவான். வேறே என்ன நடக்கும். பாயிண்டுகளுக்குப் பதில் கூறமுடியுமோ அவாளாலே!

எப்படி முடியும்? இந்தச் சமயத்திலே, பெரிய மனுஷனாகலாமென்று அவர்களுக்கு ஆசை. அதற்காக எதிர்க்கின்றனர்.

அதுதான் சூக்ஷமம்! நான் கூடத்தான், முதலிலே பாகிஸ்தானை எதிர்த்தேன். பஞ்சமா பாதகம் என்று பயங்காட்டினேன். அந்த பழஞ்சோற்றை எடுத்துக்கொண்டு, பலதுகள் பேசுகின்றன. நான் என்ன பேசியும் என்ன முடிந்தது? ஜின்னா, கிடுகிடுவென உச்சஸ்தானத்துக்குப் போய்விட்டார். அந்த ஆசாமியைச் சரிப்படுத்தாமே, ஒரு காரியமும் செய்ய முடியாது.

கட்டாயம் முடியாது. நான் அதைத்தானே மூன்று வருஷமாகச் சொல்லிக்கொண்டு வருகிறேன்.

நானும் அந்தப்பாவி களுக்கு சொல்லிச் சொல்லிப் பார்த்தேன். கேட்கவில்லை. பாகிஸ்தான் கொடுத்துவிட்டால், முஸ்லீம்கள் ஆப்கனிஸ்தானோடு சேர்ந்து கொள்வார்களாம்!

நல்லபதில் கொடுத்திருந்தீர்களே, மித்ரனிலே படித்தேன். பாகிஸ்தான் கொடுக்காவிட்டாலும் இது நடக்குமே, என்றுசரியான சூடுகொடுத்திருக்கிறீர்கள்.

எல்லாம், பழய 'விடுதலை' தான்!

ரொம்ப சந்தோஷம்! எவ்வளவோ காரணங்கள் சொல்லியிருக்கிறேன் பிரிவினைக்கு. நீங்கள்பார்த்தால் தெரியும்.

பார்த்துக்கொண்டுதான் வருகிறேன். காரணங்கள் மணி மணியாக இருப்பதால்தான், நான் உள்பட காங்கிரஸ் பூராவும் எதிர்த்தும், இந்துமித்ரன் எதிர்த்தும், பாகிஸ்தான், முஸ்லீம்களை வசியப்படுத்திவிட்டது. அந்தந்த இனம் சுதந்திரமாக வாழவேண்டுமென்று விரும்புவதுதானே இயற்கை, அதுதான் சுய நிர்ணயம். முஸ்லீம்கள் அதைத்தான் கேட்கிறார்கள். அதை எப்படித்தடுக்க முடியும்?

ஒருக்காலும் முடியாது! இன எழுச்சி உண்டாகிவிட்டது. அதைத்தடுக்க முடியவேமுடியாது. கொஞ்ச நாளைக்கு மூடிவைக்கலாம். ஆனால் வெள்ளம் கரையை உடைத்துக்கொண்டு ஓடிவருவதுபோல, இனஎழுச்சியும் பெருகிவிடும். நான் பார்க்கிறேனே கண்ணாலே. ஆயிரம் அபுல்கலாம் அஜாதும் சரி, ஒரு ஜின்னாவும் சரி. முஸ்லீம்கள் உயிர் பூராவும் ஜின்னாபேரில் வைத்திருக்கிறார்கள்.

வாஸ்தவமான பேச்சு! அபுல்கலாம் அசாதையே நான் கேட்டேனே. முஸ்லீம்கள் இவ்வளவு பேர்,

வீகில் சேராதபடி ஏனய்யா உன்னாலே தடுக்க முடியவில்லை, என்று கேட்டேன்.

என்னபதில் சொன்னார்?

பதில் என்னத்தைச் சொல்கிறது. பேந்தப் பேந்த விழித்தார்.

ஜவார்லால் கொஞ்சம் எதிர்ப்பார் போலிருக்கு!

ஜவார்லால், எதைத்தான் எதிர்க்காமலிருந்தார்? எதை எதிர்த்தபோதுதான் ஜெயித்தார்? மந்திரிசபையேகூடாது என்று கூவினார். என்ன நடந்தது?

அவர் தங்கைக்கே ஒரு மந்திரிவேலை கிடைத்தது.

அவ்வளவுதான்! உடனே மந்திரி சபையைத் திட்டாதே, என்று பாடிக்கொண்டு கிளம்பினார். ஜவர் லாலைப்பற்றி எனக்குப்பயமில்லை. இந்துவும் மித்திரனும் இனிமேல், அவரை ஒழித்துவிடும்.

இப்போ கவனம் வருதுங்க. மித்திரனிலே, ஜவர் லாலை முன்னே சரியாத்திட்டியிருந்தது. நான் சொன்னேன் அந்த ஆள் ஒரு புத்தகப்பூச்சி கவைக்குதவமாட்டான் என்று, அதேபோல சீனுவாசன் எழுதினார் மித்திரனிலே.

ஆமாம்! மித்திரன் முன்யோசனையுடன் எதையும் செய்யுமே.

இன்று இங்கே கூட்டம் நடக்குதோ?

ஆமாம்! ஈரோட்டுக்கு வந்து கூட்டம் போடாமல் போகலாமா! முன்னே, ஜெயிலுக்குப்போவதற்கு முன்பு இங்கு வந்துதானே போனேன். அப்போ மாலைபோட்டு, மனதை மாற்றியே விட்டீர்கள்.

நான் நினைச்ச துண்டுங்கோ! பிரிவினைக்கொள்கையை மறுக்கமுடியாதே, எதற்காக இவர் பாரதமாதாவை வெட்டாதே, பசுவை அறுக்காதே, வீட்டைப் பிரிக்காதே, குழந்தையைக் கொல்லாதே என்று சொல்கிறார் என்று யோசித்ததுண்டு.

எதிர்த்தால், அடங்கிவிடும் என்றுதான் பார்த்தேன். முடியவில்லையே! பாரதமாதாவை வெட்டினால் என்ன என்றுகூட ஜனங்கள் பேசத்தொடங்கிவிட்டனர். நான் விடுதலையிலேதான் படித்தேன், எட்டு கோடி முஸ்லீம்களையும் ஆறுகோடி ஆதித்திராவிடரையும் மற்றவர் கொடுமை செய்வதைக்கண்டும் சும்மா இருக்கிற பாரதமாதாவை, ஒரு வெட்டா, ஓராயிரம் துண்டுகளாக வெட்டினால்தான் என்னபாபம் என்று பேசியிருக்கிறீர்கள் ஒரு இடத்திலே.

ஞாபகசக்தியோடு சொல்கிறீர்களே! ஆமாம்! பொள்ளாச்சியிலோ, கோயம்புத்தூரிலோ, பேசினேன்.

நேரமாகிறது. நான் போய்வரட்டுமா? உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளுங்கள். நமஸ்காரம்.

ரொம்ப சந்தோஷம் நீங்கள் வந்தது. வண்டி தயாராக இருக்கா! போய்வருகிறீர்களா! வணக்கம்.

* * * * * * * *

இந்தமாதம் 29-ந்தேதி மாலை 3.மணியிலிருந்து 6-மணிக்குள், ஈரோட்டில், பெரியார் மாளிகையில், பெரியாருக்கும் தோழர் C. ராஜகோபாலாச்சாரியாருக்கும், நான் மேலே தீட்டியுள்ள விதமான சம்பாஷணை நடந்தால், நான் ஆச்சரியப்படமாட்டேன். அத்தகைய சந்திப்பும் சம்பாஷணையும் நடக்கலாம் என்று நான் எதிர்பார்க்கிறேன்—அனேகமாக நான் எதிர்பார்ப்பது நடக்காமல் போகும் வழக்கமுங்கிடையாது!

ஆச்சாரியார், யுத்தத்தை எதிர்த்துச் சிறைசெல்லுமுன் ஈரோடு சென்றபோது, பெரியாரைக் கண்டு பேசினார், இப்போது (மந்திரிசபையில் அமருவதற்கு முன்?) பெரியாரைக்கண்டு பேசுவார் என்று எண்ணுவது தவறல்ல!

இம்முறை ஆச்சாரியாரின் சுற்றுப்பிரயாணம்' போர் தொடங்கி, மூன்றாவது:

முதல் முறை, பதவியைவிட்டு விலகியதும், வீராவேசத்துடன் தமிழகத்திலே சுற்றினார்.

இந்த யுத்தம் ஏகாதிபத்திய யுத்தம். இதில் நமக்கு வேலை இல்லை. கோரமான யுத்தத்தை அஹிம்சாவாதிகளான நாம் ஆதரிக்கமுடியாது. சுயராஜ்யம் கிடைக்காமுன்பு நாம் பிரிட்டனை ஆதரிக்க முடியாது என்று கர்ஜித்தார். சுக்ரீவனுக்குப் பட்டங்கட்டினால்தானே வானரசேனை தயாராகும்.—என்று குட்டிக் கதைகளையும் புராணங்களையும் கொட்டினார்.

வீரம் அவரைச் சிறைச்சாலைக்கு அழைத்துச் சென்றது. அங்கு அவர் இராமாயணத்தை ஊன்றிக் கவனித்துப்படித்தார். அதிலே காணப்படும், ஆரிய தந்திரங்கள், அரசியல் தந்திரங்கள் அவர் மனதில் ஆழப் பதிந்தன.

இராமனிடத்து பக்தி கொண்டதாலும், சற்குணவானானதாலும், வேதவிற்பன்னனானபடியாலும், விபீஷணன் அண்ணனைவிட்டுப் பிரிந்து இராமனை வந்தடுத்தான். விபீஷண சரணாகதி, இராம இலட்சுமணர்களுக்கு விசேஷமான மகிழ்வைத்தந்தது, என்ற இந்த ஒருசம்பவம் மட்டும், ஆச்சாரியாரின் மூளைக்கு எவ்வளவு வேலை கொடுத்திருக்கும் என்று எண்ணுகிறீர்கள்.

அண்ணனைக் கெடுக்கத்துணிந்த துரோகி விபீஷணன் என்று நாமும், மகா பக்திமான் ஆகவேதான் ரகுராமனைச் சரண்புகுந்தான் என்று வைதீகர்களும் இந்தச்சம்பவத்தைப் பற்றிப்படித்து கருத்துகொள்கிறோம்.

ஆச்சாரியார், இந்தச் சம்பவத்திலே இருக்கும் அரசியல் தந்திரநுட்பத்தையே அதிகமாகக் கவனித்திருப்பார்.

அண்ணனைக் கெடுக்கவேண்டுமென்பதே விபீஷணனின் எண்ணமாக இருந்தால், அதனைஅவன் இராமன் வருமளவு செய்யாமல் கார்த்துக்கொண்டிருக்க வேண்டியதில்லையே! இராவணனைக்கவிழ்க்க, உள் நாட்டிலே சதி செய்திருக்கலாம். அது முடியாது போயினும், வெளிநாட்டு வேந்தர் எவரையேனும் தூண்டியிருக்கலாம். இராவணனை எதிர்க்க எவர்உளர் எனில் இராவணன்அஞ்சும்படி விரட்டிய வாலி கிஷ்கிந்தையில் வீரமாக ஆட்சி செலுத்திக்கொண்டிருந்தான். அவனிடம் விபீஷணன் ஏற்கனவே ஏற்பாடு செய்திருக்கலாம். இவைகள் ஏதும் செய்யாது, இராவணதர்பாரில் விபீஷணன் வீற்றிருந்தான். எனவே, துரோகசிந்தனையால், இராமனிடம் வந்தான் என்றுரைப்பது முற்றிலும் பொருந்தாது.

அதுபோலவே, சற்குணசம்பன்னன், வேத விற்பன்னன் பக்திமான் ஆகவே, இராமனை விபீஷணன் அடுத்தான் என்ற வைதீகவாதமும் பொருந்தாது. ஏனெனில், இவ்வளவு நற்குண நாயகமாக விபீஷணன் உள்ளபடி இருப்பின் இராவண ஆட்சியில் இருந்திருக்கவே சம்மதிக்க மாட்டான். இராவணனின் ஆட்சி முறையைக் கண்டித்து, தண்டனை பெற்றிருப்பான், அல்லது, இலங்கையை விட்டே வெளியேறி இருந்திருப்பான். இராமன் வருமளவும், இந்த "சற்குணசீலர்," இராவண தர்பாரில் வீற்றிருந்ததால், வைதீக வாதம் பொய்யென்றே கொள்ளவேண்டும்.

ஆச்சாரியார் இந்த இருவாதங்களையும் தள்ளிவிட்டு அரசியல் சூக்ஷமத்தைத்தான் கவனித்திருப்பார். ஏனெனில் இராமாயணத்திலே பல அரசியல் சூட்சிகள் உள்ளன. ஆச்சாரியார் இராமாயணத்திலே உள்ள வைதீகத்தைப் பாமரரிடம் வீசிவிட்டு, அதிலேஉள்ள அரசியல் யூகங்களைத் தமது சொந்த உப

(11-ம் பக்கம் பார்க்க)



# குமஸ்தாவின் பெண்தான்

அல்லது

## கொலைகாரியின் குறிப்புகள்

—• சேலமியன் •—

முன்பு: [கள்ளக்காதலனைக் கொன்று, தூக்குத் தண்டனைபெற்ற காந்தா, தன் வரலாற்றை எழுதியிருக்கிறாள். அதில் அவளது ஆரம்பக்காதல் முறிவு, கிழவனுக்குப் பெண்டானது, அவன் மாண்டது, முதலியன தீட்டப்பட்டுள்ளன. விதவையான காந்தாவிடம் மிராசுதாரர் மோகமுற்று அவளைப் பெறசூழ்ச்சிசெய்கிறார். அது இங்கே காணவும்.]

கடன்பட்டநெஞ்சம் கலங்காதிருக்குமா! என் அப்பா ஓர் பஞ்சைப்பிருமணன். அவர் பிழைக்குமிடமோ, காமாந்தகாரரின் கொலுமண்டபம். அவனோ என்னைப் பெறவேண்டுமென்று ஏதேதோ சூழ்ச்சிசெய்த வண்ணம் இருந்தான். அவனுடைய உப்பைத்தின்று வளரும் நாங்கள், அவனை என்ன செய்யமுடியும்? அவனை விரோதித்துக்கொள்ளவும் முடியாது, இணங்குவதோ கூடாது. இந்நிலையில் தவித்தோம். ஆசைகொண்ட அவன், நான் அந்தணகுலமென்றோ விதவையென்றோ, கருதுவானா? மேலும் காலம் எப்படிப்பட்டது! பிருமணர்களிடம் பயபக்தியுடன் இருந்ததுபோய், வெறுப்புடன் மக்கள் வாழும் காலம். ஆகவே மிராசுதாரர், நாளாகவாக, தமது எண்ணத்தை, ஜாடைமாடையாகக் காட்டிக்கொண்டே வந்தார். நான் தெரிந்தும் தெரியாதவள்போல் நடந்துகொண்டேன். எங்கள் வீட்டுக்கு மிராசுதாரர் வேதகிரி முதலியார் வருகிறபோது, எனக்கு அடிவயறு பகீர் என்றாகிவிடும். என்னை இணங்கச்செய்ய இந்தமுறை பலிக்காதது கண்டமிராசுதாரர், வறுமையை ஏவி' எங்களைவாட்டி, சரணடையச்செய்யத்துணிந்துவிட்டார். சில்லறைக்கடன்காரர்களைத் தூண்டிவிட்டார். அவர்கள் அப்பாமீது படையெடுத்தார்கள். பல்லைக் காட்டினார், இல்லைபோ என்றார், கடன் கொடுத்தவர்கள், கண்டிக்கலாயினர். கோர்ட்டுக்கு அடிக்கடி அப்பா போக நேரிட்டது. கடன் தொல்லையுடன், அப்பாவுக்கு உடலிலும் தொல்லை ஏற்பட்டு விட்டது. கிடைக்கிற சம்பளத்திலே பகுதி, பழய கடனைத்தீர்க்கச் சரியாகிவிடும். சாப்பாட்டுக்கே சனியன் பிடித்துக்கொண்டது. சாந்தா புஷ்பவதியானாள். அப்பா காய்ச்சலில் விழுந்தார். ஒரு மாதமாத வேலைக்குப் போகவில்லை. எங்கள் நிலைமை எப்படி இருக்குமென்பதை ஈவுஇரக்க முள்ளவர்கள் சற்று யோசித்துப்பாருங்கள். கடன்காரர் தொல்லை, காய்ச்சல், வருமானம் பூஜ்யம், வாட்டம், இவைகள் போதாவா ஒருவரைச் சித்திரவதைசெய்ய. புண்ணில் வேலிடுவது போல, அடிக்கடி வேதகிரி வருவார், "ஐயருக்குக் காய்ச்சல் எப்படி இருக்கிறது?" என்று விசாரிப்பார். மிராசுதாரர் வந்து போகும்போதெல்லாம், "காந்தா! என்ன சொல்கிறாய்? இந்த வறுமையை ஓட்டும் வல்லமை எனக்கிருக்கிறது, என்னை வசீகரிக்கும் அழகும் இளமையும் உன்னிடம் இருக்கிறது. பரஸ்பரம் உதவிசெய்து கொள்வோம். சம்மதமா?" என்று என்னைக் கேட்பதுபோலிருக்கும் அவருடைய பார்வை.

அப்பாவை, மதனப்பள்ளி ஆஸ்பத்திரிக்கு அழைத்துக்கொண்டு போனால்தான் பிழைப்பார் என்று டாக்டர் முடிவாகக் கூறிவிட்டார். அம்மாவின் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகிற்று. மஞ்சளும் குங்குமமும் போகுமே, மக்கள் தெருவில் நின்று திண்டாடுமே, நான் என்னசெய்வேன், ஜெகதீஸ்வரீ! என்று அம்மா அழுதார்கள். ஜெகதீஸ்வரிக்கு இந்தக்கஷ்டம் எப்படித்தெரியும்! அவள் வாழ்கிறாள், வாட்டம் வருத்தமின்றி.

மதனபள்ளிக்குப் போகவேண்டுமாம். மதனனின் பள்ளிக்கு நான் வர இசைந்தால் எவ்வளவு பணம் வேண்டுமானாலும் தர மிராசுதாரர் இருக்கிறார். அப்பாவின் சாவைத்தடுக்க வேண்டுமானால், நான் மிராசுதாரருக்குச் சரசக்கருவியாகவேண்டும். ஆனால் அது நேரிட்டால், உலகம் பழிக்காதோ! அப்பாவின் மானம்பறிபோகுமே. குடும்பக்கீர்த்தியும் குலப்பெருமையும் என்ன கதியாவது. வறுமையை விரட்ட, நான்விபசாரத்தை உதவிக்குக்கூப்பிடவேண்டியநிலை நேரிட்டது. என் மனம் அந்தநிலையில் எவ்வளவு பாடுபட்டிருக்கும். நான் சொன்னால் யார் நம்புவார்கள். பாய்ந்தோடிவரும் புலியைக்கண்டு பயந்து, பாழுங்கிணற்றில் குதித்தாவது உயிரைக்காப்பாற்றிக் கொள்வோம் என்று எண்ணுவதில்லையா? வறுமை என்னை வதைக்கிறது, அதனை, நான் வதைக்கவேண்டுமானால், மிராசுதாரரின் வைப்பாட்டியாக இசையவேண்டும்.

அப்பா படுக்கையில் புரளுவதும், அம்மா கண்களைக் கசக்கிக்கொள்வதும், சாந்தா திகைத்துக் கிடப்பதும், மிராசுதாரர் சிரிப்பதும், என் மனக்கண்களிலே சதா தாண்டவமாடின. விபரீத எண்ணங்கள் என் மனதிலே உதித்தன.

"காந்தா! அடி, முட்டாளே! தானாகவருகிற சீதேவியைக் காலால் உதைத்துத்தள்ளாதே"

"வேண்டாமடி காந்தா! பாபக்கிருத்யம் செய்யாதே. ஏழேழு ஜென்மத்துக்கும் விடாது. கெட்ட எண்ணங் கொள்ளாதே. கடவுள் தண்டிப்பார்."

"அவர் யார், உன்னைத் தண்டிக்க! உன் கஷ்டத்தைப் போக்க இதுவரை அவர் என்ன உதவி செய்தார்? சிச்சீ! பைத்யக்காரி, பணம் இல்லை கையிலே, படுக்கையிலே அப்பா சாகக் கிடக்கிறார், அடுப்பிலே காளான் பூத்திருக்கிறது. உலகிலே பணம் படைத்தவர்கள் உல்லாசமாக வாழுகிறார்கள். நீ வறுமையால் உருக்குலைந்து போகிறாய். உன் அப்பா பிழைக்கவும், குடும்பம் நடக்கவும், நீ வாழவும், மிராசுதாரர் மார்க்கம் காட்டுகிறார். அதைப்பாரடி! பார்த்துப்பிழை"

"பணத்துக்காக உன் மானத்தை இழக்காதே"

"மானம் வேறே தொங்குகிறதா உனக்கு! உலகிலே உண்ணச் சரியான உணவின்றி, வாழவழியின்றி இருப்பதனால், மானம் போகவில்லையா? சுத்தத் தரித்திரம், அன்னக்காவடி, நித்தியப்பட்டினி, என்று இப்போது உலகம் உன் குடும்பத்தைத் தூற்றுகிறதல்லவா? கடன்காரன், கேட்கிறானே, வெட்கம், மானம், சூடு, சொரணை இல்லையா, வயற்றுக்கு என்ன தின்கிறீர்கள், என்று. மானம் இருக்கிறதா அக்கநோத்திலே. உன் குடும்பத்தை யாரடி மதிக்கிறார்கள்? பணமில்லை என்றால் பிணந்தானே!"

"ஏழையாக இருக்கலாம். சகித்துக் கொள்ளலாம். ஆனால் விபசாரம் செய்து வாழ்க்கையை நடத்துவது என்றால், உலகம் வெறுக்கும்"

"உலகம் வெறுக்குமா? பேஷ்! பேஷ்! காந்தா! இப்போது உலகம் உங்கள் குடும்பத்திடம் பட்சம் வைத்திருக்கிறதா? உலகம் உங்களிடம் ஆசை கொண்டால், இப்படி ஏனடி, உண்ணவும் வழியின்றி கிடக்கிறீர்கள். உலகமாம், உலகம்! எந்த உலகத்தைப்பற்றி உளறுகிறாய்? புத்தகங்களிலே படிக்கிறாயே அந்த உலகமா! பைத்தியமே! அதுவேறு, உண்மையான உலகம் வேறு! ஏழைகளின் உலகமே தனிரகம்!

அதனை ஏறெடுத்துப் பார்க்காது பணக்கார உலகம். பணக்கார உலகத்தின் மீது படை எடுத்துச்செல். உன் அழகையும் இளமையையும் அம்புகளாகக்கொள். மிராசுதாரர் வில்லாக வளைவார். உன் மனம் போனபடி, அம்புகளைப்பணக்கார உலகில் பறக்கவிடு. அப்போது அந்த உலகம் உன்காலடியில் வந்து விழும். செய்துபார்."

"தாதைப்பொத்திக் கொள்ளடி காந்தா! அத்தகைய பேச்சைக் காதால் கேட்பதும் தோஷம். பணத்தைக்கண்டு மயங்காதே. அது ஒரு பிசாசு!"

"பணமா, பிசாசு? அந்தப் பிசாசு தானடி, உலகிலே பூஜிக்கப்படுகிறது. அதன் கடாட்சம் இருப்பவர்களைத்தான், பூர்வ புண்ணியவசத்தால், நிம்மதியாக, செல்வமாக, குபேர சம்பத்துடன் வாழுகிறார்கள், என்று, உலகம் துதிக்கிறது. அதன் சக்தி அபாரம்! உனக்குத் தெரியாதா? அனுபவமில்லையா? இதோ, உன் அப்பாவைப்பார். அவர் சாவதும், பிழைப்பதும், அந்தப் பிசாசைப் பொறுத்துத்தானே இருக்கிறது!"

"ஆமாம்! ஆனாலும்......................."

* * * * * * *

என் மனதிலே, இந்தச் சொற்போர் நடந்தபடி இருந்தது. சாதாரண காந்தாவுக்கும் சஞ்சலப்படும் காந்தாவுக்கும் இந்தச் சம்பாஷணை நடந்துவந்தது.

அப்பா, ஈனக்குரலுடன் இருமும் வேளையிலும், அம்மா விம்மும் வேளையிலும், தங்கை சாந்தா தன் முந்தானையால் கண்களைத் துடைத்துக் கொள்ளும்போதும், சடன்காரர் எங்கள்வீட்டை முற்றுகை போடுகையிலும், காசுதராவிட்டால் மருந்து கிடையாது என்று டாக்டர் கண்டிப்பாகக் கூறும்போதும், "காந்தா! இன்னமுமா யோசிக்கிறாய்?" என்று ஒரு குரல், என் செவியிற் கேட்கும். "ஜாக்ரதை காந்தா! உன் கற்பை இழக்காதே" என்று மற்றோர் குரல் கூறும்.

குடும்பத்திலே வேதனை, அப்பாவின் உடலிலே வேதனை, என் மனதிலும் வேதனை. இந்தச் சோதனையில் நான் தத்தளித்தேன். உலகிலே, வழக்கப்படி காரியங்கள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. என் மனதிலே எரிமலை இருப்பதுபற்றி யாருக்கு என்ன கவலை! எங்கள் கஷ்டத்தை நிவர்த்திக்க ஒருவரும் முன் வரவில்லை. கண்ணடியைக்காண நேரிடும்போது, "ஆமாம்! காந்தா! பார்த்தாயா, நீ எவ்வளவு இளையவள் நல்ல முகவெட்டு, அழகு ததும்புகிறது. ஆனால் அசடே! எவ்வளவு அவதிக்கு ஆளாகியிருக்கிறாய். ஏன் இந்தச்சிறையிலே கிடக்கிறாய்? வா வெளியே! உன்னை வரவேற்க மிராசுதாரர் காத்துக் கொண்டிருக்கிறார்" என்று காந்தா, நம்பர் இரண்டு கூறுவாள்! காந்தா, நம்பர் ஒன்று, "வேண்டாம்.! விஷசகாலே, விபரீத புத்தி" என்று எச்சரிக்கை செய்வாள். இந்த இரு காந்தாக்களின் போராட்டம் இடை விடாது நடந்தது. இறுதியில், வறுமையால் வாடிய காந்தா, காந்தா நம்பர் ஒன்று, வாழவேண்டு மென்று ஆசைகொண்ட காந்தாவிடம், இரண்டாம் நம்பர் காந்தாவிடம், தோற்றுத்தான் போனாள்! மிராசுதாரர் அப்பாவை, மதனப்பள்ளிக்கு அனுப்பினார். அவருக்கு இல்லாத அக்கரையா! விஷயம், அப்பாவுக்குத் தெரியாதபடி மூடிவைத்தேன். ஊராரின் வாயை மூட முடியுமா? அம்மாவின் கண்ணீர் பெருகிற்று. "தலையிலே இடிவிழுந்த தேடி பாவி" என்று அம்மா, வைதார்கள், நான் பழய காந்தா என்று எண்ணிக் கொண்டு! மிராசுதாரரின் மடியில் விழுந்த எனக்கு, அம்மாவின் அழுகை பற்றியக்கவலை உண்டாக வில்லை. நான் ஆயிரந்தடவை அழுதிருக்கிறேன் முன்பு! அப்பா பிழைத்துக் கொள்வார் அதுபோதும் என்று இருந்தேன். ஆனால், அப்பா மதனப் பள்ளியிலேயே இறந்து விட்டார். பூவையும் குங்குமத்தையும் அம்மா இழந்தார்கள். நானோ! அழுதேன், புரண்டேன், அலறினேன். பிறகு, கண்களைத்துடைத்துக் கொண்டேன். புதிதாக எனக்குக்கிடைத்த பூவும் குங்குமமும் பெற்றுக்கொண்டு, புது உலகில் வசிக்கப்புறப்பட்டேன். (தொடரும்.)

# திராவிட நாட்டுப் பண்.

(பாரதிதாஸன்)

மோகனம் ஆதி

**பல்லவி.**

வாழ்க வாழ்கவே
வளமார் எமது திராவிட நாடு... (வாழ்க

**சரணங்கள்**

1\. சூழும் தென்கடல் ஆடுங்குமரி
தொடரும் வடபால் அடல்சேர் வங்கம்
ஆழுங் கடல்கள் கிழக்கு மேற்காம்
அறிவும் திறனும் செறிந்த நாடு...(வாழ்க

2\. பண்டைத் தமிழும் தமிழில் மலர்ந்த
பண்ணிகர் தெலுங்கு துளு மலையாளம்
கண்டை நிகர் கன்னடமெனும் மொழிகள்
கமழக் கலைகள் சிறந்த நாடு... (வாழ்க

3\. அகிலும் தேக்கும் அழியாக் குன்றம்
அழகாய் முத்துக் குவியும் கடல்கள்
முகிலும் செந்நெலும் முழங்கு நன்செய்
முல்லைக் காடு மணக்கும் நாடு... (வாழ்க

4\. அமைவாம் உலகின் மக்களை யெல்லாம்
அடிநாள் ஈன்ற அன்னை தந்தை
தமிழர்கள் கண்டாய் அறிவையும் ஊட்டிச்
சாகாத் தலைமுறை ஆக்கிய நாடு...(வாழ்க

5\. ஆற்றில் புனலின் ஊற்றில் கனியின்
சாற்றில் தென்றல் காற்றில் நல்ல
ஆற்றல் மறவர் செயலில் பெண்கள்
அழகில் கற்பில் உயர்ந்த நாடு... (வாழ்க

6\. புனலிடை மூழ்கிப் பொழிலிடை உலவிப்
பொன்னர் இழையும் துகிலும் பூண்டு
கனிமொழி பேசி இல்லறம் நாடும்
காதல் மாதர் மகிழுறும் நாடு ...(வாழ்க



# ரோமாபுரி ராணிகளின் லீலா விநோதம்

—[ வீனஸ். ]—

## ஐந்து நாயகர் அவளுக்கு.

ஆடல் பாடல் ஒரு பக்கம்! சிரிப்பும் சரசமும் மற்றோர் பக்கம்! மதிமுகமாதரின் மதுர மொழிகளும், கனிரசமும் கலந்துண்டு போதை யேறியோர், பிரிதோர் பக்கம்! புத்தமுது கிடைத்தது என்று பூரித்து, இடையழகையும்கடைக்கண்ணழகையும் எண்ணியெண்ணி உளம்மகிழும் உல்லாசர்கள் ஒருபுறம். நீரோ மன்னனின் விருந்து மண்டபம், கோலாகலக் காட்சியாக இருந்தது. மமதைமிகுந்தமன்னன், மாதாவைக்கொன்றவன், முதல் மனைவியைக் கொன்றவன், இரண்டாம் மனைவியையும் கொன்றவன். அவன் செய்யாத அக்ரமங்கிடையாது அவனுடைய தீய பார்வை தீண்டப்பெறாத திருமதிகளின் தொகை சொற்பம்! அவனுடைய கள்ள உள்ளத்தால் பலியான குடிகள் பல! எனினும் அவன் மன்னன்! மக்களின் தலைவன்! கோல் கொண்டவன்! எனவே அவனிடம், எத்தகைய கெட்ட நடத்தை இருப்பினும், நெஞ்சில் எண்ணி, கண்ணீர் சிந்த முடியுமே யொழிய, எதிர்க்க மக்களால் முடியுமா! இது நீரோவின் நம்பிக்கை! ரோம் சாம்ராஜ்யம், ஒரு ஜூலியஸ் சீசரின் ஆணவத்தையே சகிக்கமுடியாமல், சதியில் இறங்கியதை நீரோமறந்தான். முடிதரித்த தனக்கு எவரும் பிடியில் அடங்கிவிடுவர் என்று எண்ணினான். முகஸ்துதி செய்யப்பலர் இருந்தனர்! சேவகம் புரிய சீமான்கள் காத்துக்கிடந்தனர். சேடியர் மூலம் விரக தாபத்தைப் பற்றிக்கூறி யனுப்பிய சிங்காரிகளுக்குக் குறைவில்லை! ஆனந்தத்தின் எல்லையை அடைந்தான் நீரோ! அக்கதையும் அவனும் அளவளாவி வாழ்ந்தனர்! பாவம்! அவன் அறியான், தன்னைத் தூக்கி எறியும் புரட்சிப்புயல் கிளம்பிவிட்டதென்பதை. விருந்து மண்டபத்திலே, வேடிக்கைப் பேச்சிலே, விநோதக் காட்சியிலே, வேல் விழியார் புடைசூழ வீற்றிருந்த மன்னனை நோக்கி, ஓடோடிவந்த வேலையாள், ஓலையொன்று தந்தான். படித்தான் மன்னன், பதறினான், விருந்துமண்டபம் நிசப்தமாகிவிட்டது, கீதம் நின்றது, கிண்கிணி அசைய வில்லை, மன்னனின் கண்களிலே மிரட்சி தோன்றி விட்டது. கைவிரல்கள் ஆடின, கடிதத்தைக் கிழித்து எறிந்தான், மேஜை மீதிருந்த பாத்திரங்களை வாரி வீசினான். பித்தங் கொண்டவன் போல் பிதற்றினான். "போர் பத்து! என் உயிருக்கே உலைவைத்து விட்டார்கள்! என் இன்ப வாழ்வுக்கு இறுதி நாள் வந்துவிடும் போலிருக்கிறது. என் செய்வேன்! எப்படிப் பிரிவேன் இந்தப் போகத்தை! எவர் துணைபுரிவர் இந்த நேரத்தில்" என்று கதறினான் மன்னன். களித்துக்கிடக்கக் கூடியவர்கள் கலங்கி நின்றனர். காரணம் என்ன வென்று உசாவினர்.

"கால்பா, புரட்சிக் கொடியைப்பறக்கவிட்டு விட்டான். படைகளுடன் வருகிறான் ரோம் நகருக்கு! லுஸ்டியானு கவர்னர் ஆத்தோ. அவனுக்கு உடந்தையாக இருக்கிறான். என் முடியைப்பறிக்க வருகிறான் கால்பா" என்று கூவினான் நீரோ.

கால்பா, ரோம் ராஜ்யச் சேனைகளின் அதிபன். ஸ்பெயினில் வாழ்ந்துவந்தான். நீரோவின் ஆட்சியின் அலங்கோலமும், அதனால் மக்கள் கொண்ட மனக்கொதிப்பும் தெரிந்ததும், மக்களை மதியா மன்னனை நானும் மதியேன், அவனை முறியடித்த மக்களின் துயர் தீர்ப்பேன் என்று கூறிக்கொண்டு, ரோம்நகரை நோக்கி, படைகளுடன் புறப்பட்டான். இந்தச்செய்தி கேட்ட நீரோ, சிந்தையில் திகில் கொண்டு திகைத்தான். நீலநிறவானிலே அரசிளங்குமரி போல் நிலவும் அரசிளங் குமரியின் பணிப்பெண் பரிவாரம் போல் நட்சத்திரங்களும், பிரகாசித்தன! தென்றல்வீசுகிறது. அலங்கரிக்கப்பட்ட தோணியிலே, இளமங்கையின் இசையைக் கேட்டு இன்புற்று, மலர் தூவியபஞ்சணை மீது சாய்ந்து கொண்டு இருக்கிறான் சீமான். திடீலென ஓர் பெருங் காற்று! நீலவானம் கருத்து விட்டது. நிலவும் நட்சத்திரங்களும் ஒதுங்கிக் கொண்டன. இடியும் மின்னலும், சுழலும், காற்றுமாக, சூறாவளி ஆரம்பமாகிறது. தோணியின் கதியாதாகும்! அதிலே உள்ள தோகையர் கதி என்ன? அவர்களின் துரையின் கதி என்ன! உல்லாசம் ஒரு விநாடியிலே ஓடிவிடும். அல்லோலகல்லோலம்! கீதம் போகும், அழுகுரல் எழும். ஜீவன்-பிரியும், சவத்தைச் சுறு முத்தமிடும், சுழல் இழுத்துச்செல்லும், தோணியைச் சூறாவளி தூளாக்கித்தூக்கி வீசும் காற்புறமும்.

மக்களின் க்ஷேமத்தைப் பற்றி மனதில் எண்ணாது, மமதையோடு கொடுங்கோலாட்சி செய்யும் அரசன், தோணியிற் செல்லும் சீமான், சூறாவளியால்நாசமாவதுபோல், மக்களின் புரட்சியாலோ, அரச அவையினரின் சதியாலோ சாய்வான்; இது சரிதம் ஆள்வோருக்கு எடுத்துக்காட்டும் எச்சரிக்கை! நீரோ மன்னன், இதனைக் கவனித்தானில்லை. கொடுங்கோலாட்சி புரிந்தான். ரோம் தீப்பற்றி எரியினும், வீணைநாதத்தை விட்டானில்லை. போகத்தில் புரண்டான். புல்லருடன் வாழ்ந்தான். அடக்கமுள்ள ஆக்டேவியாவைக் கொன்றான், பாப்பேயாவின் பாதத்தைப் பூஜித்தான் பின்னர், அவளையும் கொன்றான். இருமனைவிமாரும் இறந்துவிட்டனர், கற்பும் மானமும் இறந்துபட்ட கன்னிகையருடன் கூடிக் காலங்கழித்து வந்தான். ஆனால் ராஜாவுக்கோர் ராணிவேண்டாமோ! மூன்றாம் மனைவியைக் கொண்டான். அவள்பெயர் மெசாலினா! முன்னாளில் இருந்த மெசாலினாவல்ல, ஆனால் அதே பரம்பரை! நீரோவுக்கு இவள் மூன்றாம் மனைவி, இவளுக்கோ, நீரோ, ஐந்தாவது புருஷன்! நாலுபேருக்கு நாயகியாகி இருந்து பெற்ற அனுபவமும், இயற்கையாகவே அவளுக்கு அமைந்திருந்த அழகும், குறும்புத்தனமான பேச்சும், கொற்றவனை அவளிடம் குலவ வைத்தது. கோமான் அவளிடம் கொஞ்சிக்கொண்டிருந்தபோது, அவள் மூன்றாவது புருஷன் இறந்துபோக, நாலாவது புருஷனை ஒருவனை நாடியிருந்த நேரம். மூன்றுமுறை பார்த்த "மனைவி உத்தியோகம்" அவளுக்கு, மங்கைசத்தையும், ஆடவரை மயக்கும் வித்தையையும், பெருஞ்செல்வத்தையும் தந்தது. லீவ் நாட்களிலே, அரசனின் சரசம் கிடைத்தது! இந்த மெசாலினாவுக்கு அரசனைப் போன்றே வேறு பலரும் அன்பர்களாக இருந்தனர்! சிங்காரச் சோலை வழியே பலரும்சென்று களிப்புறுவதுபோல், மெசாலினாவின் வாழ்க்கை, பலருக்குச் சோலையாக இருந்தது. ஆனால் அங்கு வீசிய விஷவாயுவால், முதல் மூன்று புருஷர்களும் பாழாயினர். நாலாவதாக நீரோ மன்னனின் நேசன், வெஸ்டினஸ், அவளுக்குக் கணவனானான். தான் கொஞ்சிக் குலவிக்கொண்டு வந்த குளிர் நிழலைவேறொருவன் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டது கண்ட நீரோ, நெஞ்சம் துடித்து நின்றான். மன்னனின் மனதுக்கிசைந்தவளை மாலையிடவும் துணிவு பிறந்ததோ மடையனுக்கு! எனக்காக இருந்த கனியை, எவனோ ஒருவன் சுவைப்பதா, எற்கு மா? என்று நீரோ கோபித்தான். அந்தக்கோபம் வெஸ்டினசை மாய்க்கும் கூர்வாளாயிற்று. மன்னனின் ஏவலர், வெஸ்டினசை அவனுடைய மாளிகையிலேயே கொதிக்கும் நீரில் குளிப்பாட்டிச் சாகடித்தனர். மெ

8ம் பக்கம் பார்க்க.

**திராவிடநாடு**

ஞாயிறு] 24—5—42 [காஞ்சி.

# ஆண்டவனை அழைக்கிறார்!

"கண்ணீரைத் துடைத்துக்கொள்ளுங்கள்! கஷ்ட நஷ்டத்தைக்கண்டு கலக்கமடைய வேண்டாம். சோகமும் சலிப்பும் வளர விடவேண்டாம். ஆண்டவன் நமது அடால்ப் ஹிட்லரை ஆசீர்வதிப்பார்" என்று கோயபிள்ஸ் ஜெர்மன் மக்களுக்கு ஆறுதல் கூறுகிறார். ஜெர்மன் நாட்டிலே பிரிட்டிஷ் குண்டு மாரி பொழிந்தபடி இருக்கிறது, துறைமுகங்களிலே, கப்பல்கள் தலைகாட்ட முடிவதில்லை, தொழிற்சாலைகளிலே பொருள்கள் பொடியாகின்றன, வாலிபர்கள் வதைகின்றனர். பிரான்சைப் பணியவைத்தோம், செக்கோவைச்சிதைத்தோம், நார்வேயை நாசமாக்கினோம் என்று சொல்லிச் சொல்லி, ஜெர்மன் மக்களை வெறியர்களாக்கிய நாஜித் தலைவர்கள், இன்று ரஷியாவில் படும் அவதிகண்டு மக்கள் மருள்வதைக்கண்டு, ஆறுதல்கூற முன்வருகின்றனர். அத்தகைய நிலைமையை, வீரரஷியர்கள் உண்டாக்கிவிட்டனர். 1942ல் நாஜிகளை முறியடிக்கக்கூடிய சக்தியைச் சிகப்புப் பட்டாளம் பெற்றுவிட்டது என்று மாஸ்கோ ரேடியோ தெரிவிக்கிறது. எத்தகைய உற்சாகமான பேச்சு! எந்த மாஸ்கோவில், மூன்றே வாரத்திலே சுவஸ்திகக் கொடியைப் பறக்கவிடுவேன் என்று ஹிட்லர் கொக்கரித்தாரோ, அதே மாஸ்கோவில், எந்த மாஸ்கோவைச் சுற்றி வளைத்துக்கொண்டு படுசூரணமாக்கிவிடுவதாக நாஜிப்படைகள் மிரட்டினவோ, எந்த மாஸ்கோமீது வட்டமிட்டு நாஜி விமானங்கள் குண்டுவீசினவோ, எந்த மாஸ்கோவை விட்டு, ஸ்டாலின் ஓடிவிட்டார் என்று நாஜித்தலைவர்கள் புளுகினரோ, அந்த மாஸ்கோ, முற்றுகையிட்ட முரடர்களை மூலையில் ஓடச்செய்துவிட்டு, வீரத்தோடு கூறுகிறது, நாஜிகளை நாசமாக்குவோம், நாளும் பிறந்துவிட்டது, நமது சக்தியும் பெருகிவிட்டது என்று. உறுதி மாஸ்கோவில், அழுகுரல் பெர்லினில்! ஆட்களால் இனிஒன்றும் நடப்பதற்கில்லை என்று, ஆண்டவனை அழைக்கிறார் கோயபிள்ஸ்! ஆண்டவன், "அங்கே என்னை அழைத்துப் பயன் என்ன? நான் பகிஷ்கரிக்கப்பட்ட இடம் மாஸ்கோ! என்னையே விரட்டியவர்கள், இறுமாப்புடன் சென்ற உங்களை விரட்டுவதா கஷ்டம்." என்று கூறுவார்!

கடவுள்பற்றிய கற்பனை போன்றதே, நாஜிகளை நசுக்க யாருளர் என்றபேச்சும். அதுரஷியகளத்திலே பொய் என்று விளக்கப்பட்டு விட்டது. கோயபிள்ஸ் தேறுதல் கூறவேண்டிய அளவுக்கு, பெர்லினில் பீதியும் துக்கமும் இருக்கிறது, ஏன் இருக்காது! 200,000 ஜெர்மானியருக்கு மேலாகவே (குளிர்காலத்திலே) கடந்த 4 மாதங்களிலே ரஷியாவில் மாண்டனர்! கைகால் போயும், கண்ணிழந்தும், மண்டை உடைந்தும், மனமுடைந்தும், காய்ச்சல் கண்டும், கஷ்டத்தை அனுபவிக்கும் நாஜிகளின் தொகை 1000,000 பேருக்கு மேலிருக்குமாம். இவர்களின் வேதனைக்குரல், எத்தகைய நாஜிபோதையையும் தெளியவைத்திருக்கும். மாஸ்கோவை நெருங்கினதும், நெருப்புடன் விளையாடியவர்கள் சூடுண்டு ஓடிவிடுவதுபோல், சுவஸ்திகச் சூருவளிப்படை பிடரியில் கால்பட பின்வாங்கி விட்டது! பிடித்த கோட்டைகளிலே, பிணமலை குவித்தும் பயன்காணாது, ரஷியரிடம் விட்டு விட்டு நாஜிப்படைகள் ஓடிவிட்டன. கடந்த நாலுமாதங்களிலே, மொஜாய்ஸ்க், ராஸ்டாவ், ட்ரோபெட்ஸ், முதலியஇராணுவமுக்கியத்துவம் வாய்ந்த இடங்களை, ரஷியர்கள் திருப்பிப் பிடித்துவிட்டனர். வசந்தகாலப்போரும், வாட்டத்தையே நாஜிகளுக்குத் தருகிறது. நாலுமாதத்திலே 300,000 நாஜிப்படைமோட்டார்கள் நாசமாயின, சேதமானவை அந்தத் தொகை யிருக்குமாம்.

இதேகாலத்திலே, 50 புதிய பட்டாளங்களைத் திரட்டிவிட்டனர் ரஷியர்! அந்தப்படைகள், கையிலும் கருத்திலும், தினவெடுத்துக்கொண்டு, பாயும் வேளையை எதிர் பார்த்துக் கொண்டுள்ளன. நாஜிகளின் நினைப்பு நாசமாகிவிட்டது. மாஸ்கோவைச் சுற்றியிருந்த தளவாடத்தொழிற்சாலைகளை, உள்பக்கமாகக்கொண்டு, போய்விட்டனர். இனிச்சில ஆயிரமைல்கள் நாஜிகளிடம் சிக்கினாலும், தளவாட உற்பத்தி பாதிக்கப்படாது. அந்த முன்னேற்பாட்டையும், சோவியத்செய்துவிட்டது. ஜெர்மன் சோகத்துக்குக் காரணம் இவையே!

ஹிட்லர் கிளம்பியதும் எங்ஙனம் முசோலினியின் புகழ் புகைந்து போயிற்றோ அதுபோல், ஜப்பான் கிளம்பியபிறகு, ஹிட்லரின் ஆவேச ஆட்டத்தை இலட்சியஞ்செய்ய அச்சுஉலகிலே ஆள் இல்லை. ஆகவே, எத்தனை இலட்சம் ஜெர்மானியரைப்பிணமாக்கியாவது, ஒரு புகழ்மாலை போட்டுக்கொள்ள வேண்டுமென்று ஹிட்லர் துடிக்கிறார். ஆனால், ஹிட்லரின் இறுதிநாட்கள் நெருங்கிவிட்டன! நேசநாடுகள் நிமிர்ந்து நிற்கின்றன. மடகாஸ்கரைப்பிடித்ததும், டோக்கியோவைத் தாக்கியதும், ஜெர்மன் தொழிற்சாலைகளைத் தவிடுபொடியாக்கியதும், மால்ட்டாவிலே நாஜிவிமானங்களை நொறுக்கித்தள்ளுவதும், வடஅயர்லாந்திலே அமெரிக்கத் துருப்புகள் மேலும் மேலும் வந்து குவிவதும், இதனை விளக்குகின்றன. ஐரோப்பாவில் இரண்டாவது போர்முனையை ஏற்படுத்த வேண்டிய தன் அவசியத்தை ஒப்புக்கொண்டு, மேஜர் அட்லியும், சர். ஸ்டாபோர்டு கிரிப்சும், பேசியிருப்பதும் கூர்ந்து நோக்கத் தக்கசம்பவம். நார்வேயிலே நாஜிகளுக்கு எதிர்ப்பு அதிகரித்து விட்டது. டென்மார்க்கிலே பிரிட்டிஸ் பாரசூட்படையினர் இறங்கினர் நாஜிகளிடம் சிக்கிக்கொள்ளவில்லை. இவைகள் ஜெர்மனிக்கு நேரிட இருக்கும்கதியை முன்கூட்டிக்காட்டும் அறிகுறிகள் என்போம். இந்தநேரத்தில், நிலைமையில், கோயபிள்ஸ், ஆண்டவனைக்கூப்பிடுகிறார். அடால்பைக் காப்பாப்பாற்ற! வோல்கா நதியே செந்நீராக மாறும் விதத்திலே மூண்ட புரட்சியின்போது, ஜார்கூட, ஆண்டவனைத்துணைக்கழைத்தான்! சிறைக்கூடத்தைத் தூளாக்கி, மாளிகைகளைத் தரைமட்டமாக்கி, அரண்மனையைநோக்கி, ஆவேசத்துடன் மக்கள் கடலென வந்தபோது, பிரன்ச்சு நாட்டரசன்கூட, 'ஆபத்பாந்தவனை" அன்போடு அழைத்துத்தான் பார்த்தார்! வாடர்லூ சண்டையின்போது நெப்போலியன் தேவனை"த் துதிக்காமலில்லை! கெய்சர் கடவுளைத்தொழாமலில்லை! ஆனால், அவர்களின் முடிவுயாதாயின! கடவுள், மதம், கற்பனை, முதலாளித்துவம், உலக வல்லரசுகளின், விரோதம் ஆகிய எதையும் பொருட்படுத்தாது பாட்டாளி மக்களின் படைதிரட்டி, பாரோர் நேட்டிராத விதமான பயங்கரப் புரட்சி நடத்திவெற்றி கண்ட லெனின் வாழ்ந்த இடத்திலே, நாஜிகளின் நினைப்பு நடக்குமா, பலிக்குமா! ஹிட்லரின் சவக்குழி, சிகப்புப்பட்டாளத்தால் தயாரிக்கப்பட்டு வருகிறது. சவக்குழிக்கு அருகே இருந்து, ஆசீர்வதிக்க ஆண்டவனும், அங்கு அனுமதிக்கப்படமாட்டார். ஆண்டவன் சென்றால், அங்குள்ள, மக்கள் "சர்வவல்லமை படைத்தவரென ஆஸ்தீகர்களால் துதிக்கப்படுபவரே, எங்கள் இரத்தவெள்ளத்தைப் பெருக்கியன்றோ இவனைச்சாகடித்தோம். இதுவரை எங்கே சென்றிருந்தீர்! ஏன் இத்தகைய தீயோனைத்தோன்றச் செய்தீர்!" என்று கேட்பர். ஆண்டவன், சர்வமும் தெரிந்தவராமே! அவர் ஏன் அங்கே செல்லப்போகிறார்!! அங்கு போகாமலேயே, அவரும் ஆறுதல்அடைவார், "ஒழிந்ததுசனியன்! இந்த ஹிட்லரின் கொடுமைக்கு ஆளான மக்கள், ஆண்டவனே ! உனக்குக் கண்ணில்லையா! என்று விநாடிக்கோர் முறை கேட்டுக்கொண்டிருந்தனர், இனி நமக்கு அந்தத்தூற்றுதல் இராது" என்று கருதிமகிழ்வார்!



## ஐயன் சிங்காரங்களைப் பாரும்!

செருப்புகள் பறந்தன! கற்கள் கடுவேகமாகச் சுழன்றன! கூச்சலோ சொல்லி முடியாது! ஒழிக, ஒழிக, ஒழிக, என்ற கூச்சல்! ஓடு, ஓடு, விடு, விடு, பிடிபிடி, என்ற கூக்குரல். கையை ஒருவர் பிடித்திழுக்க, காலை ஒருவர் தட்டிவிட, கழுத்தை மற்றொருவர் தட்ட, தலைமீது மண்விழ, தத்தளித்தார் தலைவர்! சட்டையைச் சுக்குநூறாகக் கிழித்தெறிந்தனர் ஆத்திரங்கொண்ட மக்கள். கேள்விக்குப் பதில் சொல்! ஓடி ஒளியாதே நில்! நாட்டைக் கெடுக்காதே. நயவஞ்சகம்பேசாதே! குட்டிக்கதைகளைக் கொட்டாதே. குதர்க்கம் பேசாதே. பதவிவேட்டை ஆடாதே. பார்ப்பன யுத்தியைக் காட்டாதே! கேள்விக்குப் பதில் கூறாமல், ஏன் ஓடுகிறாய் என்று ஆளுக்கோர் பேச்சு, எங்கும் அலங்கோலமாச்சு!

எங்கே? யாருக்கு நேரிட்டது இந்தக் கண்றாவி? மதுரையம்பதியிலே, மாபெருந்தலைவர், ராஜகோபாலாச்சாரியாருக்கு! ஏன் நடந்தது? பட்டினத்தடிகள் கூறினார், தன்வினை தன்னைச்சுடும், ஓட்டப்பம் வீட்டைச் சுடும்என்று. அதுபோல், ஆச்சாரியார் இரண்டு ஆண்டுகளாக, சீடர்களை, சீறிவிழுந்து பாரதமாதாவை வெட்டுவதைத் தடுமின், பசுவைக் கொல்லப் பார்த்துக் கொண்டிராதீர்கள் என்று கூறிவைத்தார். இப்போது அவர் பாகிஸ்தானை ஆதரிக்கிறார், அவரிடம் பாடங்கேட்ட "பக்த கோடிகள்" கொதித்து இத்தகைய கோலத்தைக் காட்டினர்.

ஐயன் சிங்காரத்தைப் பாரும்! அவரடைந்த அலங்கோல மதை நீர்கேளும்! பொதுமக்களை எப்படி வேண்டுமானாலும், வளைய வைக்கலாம் என்ற எண்ணங் கொண்டுள்ள தலைவர்கள், இக்கதிக்கே ஆளாகின்றனர். ஆச்சாரியாருக்கோ, யாருக்கும் இதுவரை ஏற்பட்டிராத கௌரவம், கிடைத்திருக்கிறது! எந்தத் தலைவருக்குத்தான், அவரது சொந்தக்கட்சியிலே இத்தகைய சோடசோபசாரங்கள் நடந்தன! தலைவரின் போக்கு தொண்டர்களைத் துடிக்கச்செய்கிறது, தொண்டர்களின் ஆத்திரம் தலைவரைத் திணற வைக்கிறது. இத்தகைய தலைவரையும் தொண்டரையும் கொண்ட கட்சிதான் பரிசுத்தமான கட்சியாம்! இவ்வளவு தத்தளிக்கும்! தலைவர்தான், தேசியமுன்னணியை அமைக்க தேசீய சர்க்கார் ஏற்படுத்த வேண்டுமென்று தேசபக்தி மேலிட்டு தெருவிற்திறிகிறாராம்! மதுரைக் கூட்டத்திலே நடந்த மரியாதையைக் கேள்விப்பட்டபிறகு, ஆச்சாரியாருக்கிருக்கும் செல்வாக்கு இவ்வளவுதானா, என்று கண்டு ஜனாப் ஜின்னா கைகொட்டிநகைப்பார்!

## எதிரொலி

"மூரசு"

"வெள்ளையர் ஆதிக்கம் என்னும் "விஷம்" முற்றிலும் அழிக்கப்படும் வரைக்கும், ஜனநாயகத்தைக் காப்பாற்றுவது, நாகரிகம், மனித சுதந்திரம், ஆகியவற்றைக்காப்பது என்று பேசுவதற்கு அவர்களுக்கு (வெள்ளையர்களுக்கு) உரிமை கிடையாது"

—காந்தி.

அதுபோலவே திராவிட நாட்டில் ஆரிய ஆதிக்கம் என்னும் "விஷம்" முற்றிலும் அழிக்கப்படும் வரைக்கும், தமிழகத்தைக் காப்பாற்றுவது, நாகரிகம், மனித சுதந்திரம், மக்களின் நலன்களைக் காப்பது என்று பேசுவதற்கு ஆரிய ஆச்சாரியாருக்கோ, சத்தியமூர்த்திக்கோ அல்லது வடவருக்கோ உரிமைகிடையாது. திராவிடர்களுக்காகத்திராவிடத் தலைவர்கள் பேசட்டும்.

ஃ ஃ ஃ ஃ

"முஸ்லீம்கள் அதைவிரும்பினாலும், இந்த உலகத்தில் எந்த சக்தியும் அவர்கள் அதை அடைவதைத் தடுக்க முடியாது என்பதை நான் மீண்டும் கூறுகிறேன். ஏனெனில் மறுப்பதற்கான நிபந்தனை சண்டை போடுவதாகத் தானிருக்கும்."

—காந்தி.

திராவிடர்கள் சம்பந்தமாகவும் தாங்கள் இம்மாதிரி அனுபவ அறிவுரைகள் சொல்ல அதிக காலமாகாது, திராவிடஸ்தான் முழக்கம் கேளாக்காதரையும் கூட பதைக்கவைத்துத் தமிழ்நாட்டில் சுற்றுப்பிரயாணம் செய்யக் கிளப்பிவிட்டது!

ஃ ஃ ஃ ஃ

"நாயக்கர் கேட்கும் திராவிடஸ்தான் கொடுத்துவிடலாம் என்று வட இந்தியர்கள் சொன்னால் தமிழ் நாட்டவருக்கு எப்படியிருக்கும்?"

—என். அண்ணாமலைப் பிள்ளை.

உண்மைத் தமிழன் களிப்படைவான். உரிமையோடு ஊராள்வான். சூத்திரநிலை, அடிமை வாழ்வு விரும்பும் பார்ப்பனப் பாதந்தாங்கிகள் திகைப்படைவர்; தில்லுமல்லு பேசுவர்!

ஃ ஃ ஃ ஃ

"இந்தியாவிலுள்ள மற்றப் பகுதியினருக்குள்ள சுயநிர்ணயாதிகார உரிமை முஸ்லீம்களுக்கும் வேண்டும்.........முஸ்லீம்களை தங்கள் விருப்பத்திற்கு மாறாக நம்முடன் வசிக்கக் கட்டாயப் படுத்துவது பலாத்காரமாகும்!"

— சி. இராஜகோபாலாச்சாரி,

அம்மாதிரி சுயநிர்ணயாதிகாரம் வேண்டுமென்பதே திராவிட மக்களின் கோரிக்கை! திராவிடர்களை விருப்பத்திற்கு மாறாக அடிமையாகவும், இழிந்த குலத்தவனாகவும் "இந்து" என்றசுரித்திரப் பெயர் சூட்டி இறுகப்பிணைத்து ஆரியத்தின் காலடியில் வாழச்செய்வது பலாத்காரமல்லது வேறென்ன?

ஃ ஃ ஃ ஃ

## சென்னையில் தேசீய சர்க்கார்

3 காங்கிரஸ்காரர், 3 ஜஸ்டிஸ் கட்சியினர், 3 லீகர்கள், 1 ஆதித்திராவிடப் பிரதிநிதி ஆக 10 பேர் கொண்ட, தேசீய சர்க்காரைச்சென்னையில் ஏற்படுத்த முயற்சி நடப்பதாக அரசியல் வட்டாரத்தில் கூறப்படுகிறது.

ரோமாபுரி ராணி. 5ம் பக்கத் தொடர்ச்சி

சாலினாவுக்கு இது தெரியும், ஆனால் அவள் இதற்கு அஞ்சுபவளா! மூன்று முறை கணவனை இழந்து பெற்ற அனுபவம் அவளுக்கில்லையா! நாலாவது பேர் வழிபோனாலென்ன! ஐந்தாம் புருடனுக்கு ஏற்கனவே "அச்சாரம்" வாங்கிவிட்டோமே என்று எண்ணினாள். அதிலும், வெஸ்டினசை மன்னன் கொன்று விட்டது, தன்னைப்பெறுவதற்கே என்பது தெரிந்ததும், தனது பாதையில் இருந்த ஓர் பள்ளத்தைத் தாண்டி விட்டதாக மெசாலினா கருதினாளேயொழியபர்த்தா இறந்து விட்டார் என்று பதறவில்லை. அவள் எதிர்பார்த்த படியே, நீரோ, அவளை மனைவியாக்கிக் கொண்டான். ஐந்தாம் புருடன் ரோம்சாம்ராஜ்யாதிபதியாகக்கிடைத்தது கண்டு, முதல் நால்வர் பிரிந்தது, இந்த முதன்மைஸ்தானம் தனக்குக்கிடைக்கவே போலும் என்று எண்ணி, போனவர்களைப் பற்றி எண்ணிப் புலம்பாது, இருக்கும் மன்னனின் இன்பவல்லியானாள்.

மூன்றும்மனைவியுடன் நீரோ வாழ்ந்து வந்த நாட்களிலே தான், அவனாட்சிக்கு முடிவுகாலமும் பிறந்தது.

கால்பாவும், ஆத்தோவும் புரட்சி செய்யவே, மனம் புழுங்கி வதைந்து வந்த மக்கள், அவ்விருவரையும் ரோம் ராஜ்ய ரட்சகர்கள் என்று போற்றினர். செனட், மன்னன் மீது சீறிற்று. சீமான்கள் அவனை விட்டுப் பிரிந்தனர். நண்பர்கள் ஒளிந்து கொண்டனர். நாயகிகள் நந்தவனத்திலே நாகம் புகுந்தால் ஓடிடும் நங்கையர்போல், மன்னனின்மாளிகையைவிட்டு ஓடினர். மருண்ட மன்னனைத் தேற்றுவார் இல்லை. இன்னது செய்வதென்று தெரியாது தவித்தான் நீரோ. அவனுடைய கொடுமைக்குப் பலியானவர்கள்கொதித்ததுபற்றி அவன்முன்னம் அறியான். அன்றுபுரட்சி, அவனிடம் வஞ்சந் தீர்த்துக்கொண்டது. விஷந்தின்று இறப்பதா, ஆற்றில்வீழ்ந்துமடிவதா, மக்களிடம் மண்டியிட்டு மன்னிப்புக் கோருவதா, புரட்சித் தலைவர்களின் பாதத்தைப்பிடித்துக்கொண்டு உயிர்ப்பிச்சை கேட்பதா, என்று பலப்பல எண்ணினான். கையிலே ஓர் தங்கப்பேழை! அதிலே கடுவிஷம்! இதைவைத்துக் கொண்டு நந்தவனத்திலே உலவினான். நஞ்சுதின்ன, மனம்துணியவில்லை. கடைசியில், ஊருக்குவெளியே உள்ள தனது வேலைக்காரனொருவனின் விடுதிக்கு விரைந்தோடினான். விம்மி விம்மி அழுதான்! தற்கொலை செய்துகொள்ளத் தீர்மானித்தான். நீரோவின் எதிரிலேயே, அவனுக்கோர் சவக்குழி வெட்டப்பட்டது. சிங்காதனத்திலே வீற்றிருந்து, வெளிநாட்டு வேந்தர்கள் தரும் கப்பத்தைக் கண்டு பூரித்து, பிரதானியர் பேசிடும் புகழுரைகேட்டு மகிழ்ந்த நீரோ, வேலையாட்கள் கூரிய கட்டாரியைக் கொடுத்து "கொற்றவனே! கொலைக்களத்திலே மாள்வதைவிட, இது கொடிதல்ல' என்றுகூறவும் எதிரே, சவக்குழி தயாராக இருக்கவும் கண்டு, மனம் துடிதுடித்தான். கட்டாரியும் அவன்கையில் நடுங்கியது. குத்திக்கொண்டான், ஆழமாகப் பாயவில்லை, உடனிருந்த வேலையாள், அந்த உதவியைச் செய்தான். கட்டாரி மன்னனைச் சாகடித்தது.

நீரோவை ஐந்தாம் புருடனாகப்பெற்ற மெசாலினா, மன்னன் பிணமான பிறகு என்செய்தாள்! ஆறாவது புருடனாக ஆத்தோவை மணக்க ஆடையணி பூண்டாள். ஆனால் அவள் எண்ணம் ஈடேறவில்லை. ஆத்தோவே தற்கொலை செய்துகொள்ளும்படி நேரிட்டது. ஆறுவது புருடன் கிடைக்காதது மெசாலினாவுக்கு மனவாட்டத்தைத் தந்ததேயொழிய நீரோவின் கதி அவளைக் கலங்கவைக்கவில்லை. சின்னாள் வாழ்ந்து பிறகு மெசாலினாவும் மண்ணுடன் சேர்ந்தாள்.

## சர். சண்முகம்

சர் R. K. ஷண்முகம் அவர்களை ஜஸ்டிஸ் கட்சித்தலைமைப் பதவியை ஏற்றுக்கொள்ளும்படி நமது கட்சியின் பிரமுகர்கள் முயற்சி செய்யப்போவதாகத் தெரியவருகிறது.

திராவிட நாட்டுப்பிரிவினை சம்பந்தமாக, எதிர்கால அரசியலில் திட்டம் ஏற்படும் என்ற நம்பிக்கை பலமாகி வருவதால், அச்சமயம் சர். சண்முகம், ஜஸ்டிஸ் கட்சித் தலைவராக இருந்து, பிரிட்டன் சென்று திராவிடர்களின் கோரிக்கைகளை விளக்கி வெற்றி பெற வேண்டுமென்று கட்சிப் பிரமுகர்கள் கருதுகின்றனர்.

ஜஸ்டிஸ் கட்சியின் தூதுக் கோஷ்டியொன்று விரைவில் சர். சண்முகத்தைக் கண்டுபேசி, இக்கருத்தைவலியுறுத்துமென்றும் கூறப்படுகிறது.

சர். சண்முகம், பெரியாரின் நன்மதிப்பையும் தோழமையையும் பெற்றவர். கட்சித் தொண்டர்களுக்கு, சர். சண்முகத்தினிடம் தனியான பற்று உண்டு. வெளி நாட்டு விற்பன்னர்களாலும் போற்றப்படும் திராவிடத் திலகம், ஜஸ்டிஸ் கட்சியைத் தலைமைதாங்கி நடத்திச்செல்ல முன் வந்தால், பெரியார், பெருமகிழ்ச்சி கொள்வார் என்பதில் ஐயமில்லை.

---

சிதம்பரம்

## வன்னியகுல க்ஷத்திரியர் கழகம்.

17—5—42 ஞாயிறு மாலை இக்கழகத்தின் 3வது ஆண்டு நிறைவுவிழா பச்சையப்பன் பள்ளி மன்றத்தில் திரு P. தாமோதர மழவராயர் அவர்கள் B. A. (Hons) தலைமையில் துவங்கி சில அறிஞர்கள் சொற்பொழிவுகளுக்குப் பின் திரு. S திருவேங்கட நயினார் அவர்கள் B. A. L. T. நன்றிகூற விழா இனிது முடிந்தது பின்னர், பது ஆண்டுக்கு கழக நிர்வாகிகள் தேர்தல் நடைபெற்று திரு S. பூவராகன் அவர்கள் B. A. தலைவராகவும் திரு. N. V இராமசாமி அவர்கள் அமைச்சராகவும் பிற 15 பேர் உறுப்பினர் களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

## திருச்சி.

தமிழ்நாடு விதவா விவாகசங்க மறுமண ஆதரவளிக்கும் கூட்டுகாரியதரிசி S. பார்வதி அம்மையாருக்குச் சென்ற சித்திரைமீ முதல்வாரத்தில் பெண் குழந்தை பிறந்திருக்கிறது. அக்குழந்தைக்கு கண்ணகி என்னும் பெயரைச்சூட்டினர் ஷை குழந்தை கண்ணகையம்மையார் ஞாபகார்த்தமாய் திராவிடநாடு பத்திரிக்கை வளர்ச்சிக்கு நன்கொடை ஒருரூபாய் அனுப்பியுள்ளார்.

## மறுமணம்.

தமிழ்நாடு விதவா விவாகசங்க ஆதரவில் கலப்பு விதவைமணம் நடைபெற்றது. திருச்சி பட்டுநூல்காரத்தெரு நா. பழனியப்ப ஆசாரிக்கும் மாநப்பமுதலியார் மகள் நாகம்மாளுக்கும் 3—4—42ந்தேதி ரிஜிஸ்டர் ஆபீசர் முன்னிலையில் ஷை சங்கக்காரியதரிசி S. சிவலிங்கம் முயற்சியால் தம்பதிகள் பெற்றோர்களும் இருந்து இந்தியன் ஆக்டின்படி மணமக்கள் உறுதிமொழி கேட்டு சம்மதக்கலப்பு விதவைமணம் நடைபெற்றது என காரியதரிசி அறிவிக்கிறார்.

### நாகைமணி

தோழர் நாகைமணி குடல் கோயினால் மிகக்கஷ்டப்பட்டு, இப்போது சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகிறார். மிகவும் இளைத்துப் போய்விட்டார் என்றபோதிலும் படிப்படியாகக் குணமடைந்து வருகிறார்.



திருக்கழுக்குன்றம்

# முழக்கம்

ஜஸ்டிஸ் மாநாடு

பாரதியார் — பெரியார்

### பாரதியார்.

திருக்கழுக்குன்றத்தில் நடந்தேறிய ஜஸ்டிஸ்மாநாட்டில், தலைமைதாங்கிய பேரன்பர் சோமசுந்தர பாரதியார் தமிழரின் தற்கால நிலை, முற்காலச்சிறப்பு, ஆரிய இயல்பு ஆகியவைபற்றி ஆராய்ச்சிமிக்க ஆற்றலுரை செய்தார்.

"பாஞ்சாலி ஓர் கன்னி! கனி என்று குளிர்ச்சியாற் குளறினான் அர்ஜுனன். பகிர்ந்துகொள்வீர் என்றாள் மாதா. பாஞ்சாலி ஐவருக்கும் பெண்டானாள். ஆரிய அலங்கோலம் பாரீர்.

ஆரிய இராமனே, சீதையைத் தேடச்சென்ற அனுமனிடம், அடையாளத்துக்காகக் கூறியவர்ணனையில், சொல்லவும் கூசும் வர்ணனைகளைக் கூறுகிறான். ஆபாசத்தை அறிமின்!

காலச்சிறையில் கிடந்துழன்று ஆரியக்கற்பனைக்குப் புலமை மெருகிட்டான் கம்பன்! பித்தனென்பேன் அவனை.

இத்தன்மையான கற்பனைகள் தமிழருக்கு, பண்டைநாட்களிற் கிடையாது. ஆரியம் வந்தே அனைத்தையுங் கெடுத்தது.

ஆரியர்களின் கடவுளின் இலட்சணத்தைத்தான் எடுத்துக்கொள்ளுங்கள். கண்ணனுக்குஎத்தனை மனைவிமார். அத்தைமீதும் ஆசைகொண்டான். அதுமட்டுமா? கூட்டங் கூட்டமாகக் கோபிகைகளைக் கூடினான். இவர் கடவுள்!

சுயமரியாதைக்காரர்களைத் திட்டுகிறார்களே வைதிகர்கள், இத்தகைய கடவுட் கதைகளை வைத்துக்கொண்டிருக்கக்கூச்சம் இல்லையா! இதுவாமதம்! மதம் என்றால் திமிர் என்பதே பொருள். தமிழன் கண்டது "நெறி". அந்த நெறியினின்றும் வழுவினான், தமிழன் இன்று வதைகிறான்.

தமிழனின் வாணிபம் ரோம்வரை பரவியிருந்தது. தமிழனின் வீரம் வங்கம், கலிங்கம், இமயம் வரை பரவிற்று. பழங்காலச்சங்க நூற்களிலே இவைகளைக் காணலாம். பிறகு வெளிவந்த நூற்கள், இடைச்செருகலும், ஆரியக்கலப்பும் கொண்டவை. அவைகளை நான் மதிப்பதில்லை. தமிழனின் வாழ்க்கைக்கு, வழிகாட்டியாக வள்ளுவன் வழங்கிய குறள் போதுமே. குறளின் குணமறியின், குனியாது வாழுங்குணம் பெறுவர் தமிழர்.

விதி, விதி, என்ற வீண்பேச்சு தமிழருக்குக் கிடையாது. தமிழன் சொன்னான், "முயற்சியுடன் காரியத்தைச் செய்யத்தொடங்கினால், கச்சையை வரிந்து கட்டிக்கொண்டு, ஆண்டவன் ஓடோடிவருவார்" என்று! ஊழ் என்னசெய்யும் என்று கேட்டான் தமிழன்! முயன்றால், ஊழைப்பின்னால் தள்ளிவிட்டு, நாம் முன்னேறமுடியும் என்று கூறினான் தமிழன். அத்தகைய இனம் இன்று ஏங்கிக்கிடக்கிறது, ஜாதி என்ற சொல்லைக் கேட்டறியாத தமிழரிடையே இன்று எண்ணற்ற ஜாதிகள் காணப்படுகின்றன.

நானும் காங்கிரசிலே பன்னெடுங்காலம் இருந்தேன். பணிபல ஆற்றினேன். என்றையத்தினம், ஆரிய அமைச்சர், எனது தமிழ் மொழியிலே கை வைத்தாரோ அன்றே நான் காங்கிரசைத் துறந்தேன்.

### பெரியார்.

திருக்கழுக்குன்றம் மாநாட்டைத் திறந்துவைக்க, பெரியார் ஈ. வெ. ரா வந்திருந்தார். வெப்பத்தை நீக்கிடும் தென்றல்போல், தமிழரிடை பெரியார் இருக்கிறார். அவருடைய அரிய உரையிலே அன்று, புலவர்களும் புதுமையும் என்பதுபற்றிய விளக்கம் அழகுற இருந்தது.

நமது புலவர்கள், பெரும்பாலும் வறுமையில் வாடிக்கிடந்தனர். வாழ்க்கைக்கு வழிதேடவே அவர்கள் பாடுபடவேண்டி இருந்தது. ஆகவே அவர்கள் புராணச் சேற்றிலேயே கவிச்செந்தாமரையை விளைவித்தனர். ஆரியரின் அடிமைகளாகவே இருந்துவந்தனர். நல்லபுலவர் என்றால், திருவிளையாடற் புராணத்துக்கு விரிவுரையோ, பெரிய புராணத்துக்குக் கருத்துரையோ எழுதியவராக இருப்பார். மேனாட்டிலே புலவர்கள், இப்படி, மதத்தைக் கட்டிக்கொண்டு அழுவதில்லை. புராணத்திலே புரளுவதில்லை. அவர்களின் புலமை, புத்துலக அமைப்புக்கு உதவிற்று.

தோழர் பாரதியார், இத்தகைய, மேனாட்டுப்புலவர் போன்ற தன்மையுடையவர். அவர், தைரியமாக, மனதிற் பட்டதை எடுத்துரைப்பவர். புராண ஆபாசங்களைக் கண்டிப்பவர். அத்தகயவரை, மாநாட்டுக்குத்தலைமை வகிக்க இசையச்செய்த மாநாட்டு நிர்வாகிகளை நான் மிகவும் பாராட்டுகிறேன்.

தமிழர்கள், ஆரிய ஆட்சியில் இருந்து பட்டுவரும் அவதிகள் அனேகம். அவை போகவே நீதிக்கட்சி பாடு படுகிறது. திராவிடநாடு தனிநாடாக அமைந்தால், நமக்கு இந்தக்கஷ்டங்கள் இருக்காது. பிரிவினைக் கொள்கையை, பிரிட்டிஷாரும் ஒப்புக்கொண்டுவிட்டனர். ஆச்சாரியாரும் இப்போது பாகிஸ்தானை ஆதரித்துவிட்டார்.

சென்னை சட்டசபைக் காங்கிரஸ் கட்சி பாகிஸ்தானை ஆதரித்து நிறைவேற்றிய தீர்மானத்தைப்பற்றி, நான் கொண்டுள்ள கருத்தை விளக்கி, ஏற்கனவே ஒரு அறிக்கை, ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளியிட்டேன். அதைத் தோழர்கள் பார்த்திருப்பீர்கள்

நமது நாட்டுப்பிரச்னையான, பார்ப்பனர்—பார்ப்பனரல்லாதார் போராட்டத்தைப்பற்றி, ஆச்சாரியார், வாய்திறவாமல், பாகிஸ்தானைப்பற்றி மட்டும் பேசி, முஸ்லீம்களைச் சரிப்படுத்தலாம் என்று கருதுகிறார். அதுபலிக்காது.

திராவிடநாட்டுப் பிரிவினைக்கு, ஆதரவுபலமாகிக்கொண்டே வருகிறது. எதிர்பார்க்காத இடங்களிலிருந்தும் ஆதரவு கிடைத்த வண்ணம் இருக்கிறது. சர். ஸ்டாபோர்டு கிரிப்சிடம் இதனை நாங்கள் வலியுறுத்திக் கூறினோம்.

தோழர் முத்துரங்க முதலியார், என்னைக் காங்கிரசுக்கு வந்துசேர்ந்து, திருத்தும்படி கூப்பிடுகிறார், ஒரு அறிக்கை வெளியிட்டு. காங்கிரசிலிருந்து பார்த்துவிட்டுத்தானே நான் வெளிவந்தேன். மறுபடி வருவது என்னத்திற்கு? தமிழ் நாட்டுக்காங்கிரசையே நாங்கள் கைப்பற்றினாலும், எவனாவது ஒரு ஆரியன் அகில இந்தியக் காங்கிரசைச் சரிப்படுத்திக் கொள்வான். தமிழ்நாடு காங்கிரஸ் கலைக்கப்பட்டுவிட்டது

பாரதியார்

இந்த மடத்தனம் மிகுந்தநாட்டிலே, மதபோதனை செய்தால் தான் தலைவனாக முடியுமென்பதைத் தெரிந் துகொண்டுதான், காந்தியார் மகாத்மாபட்டம் புனைந் துகொண்டார். மகாத்மாவானல், மலைமீதேறித்தவங் கிடக்கட்டுமே! மகாத்மாவுக்கு அரசியலிலே, என்ன வேலை?

நீதிக்கட்சியினை பலப்படுத்தி, நமதுநாட்டு ஆட் சிநம்மவருக்கு இருக்கும்படியான நிலைமையை உண் டாக்கவேண்டும். தமிழ்நாடு தமிழருக்காக வேண்டும்."

பேரன்பர் பாரதியாரின் விரிவான சொற்பொ ழிவு, மக்களின் மனதைக் கொள்ளைகொண்டது. சிர் திருத்தக்கருத்துகளுக்கும், புத்துலக அமைப்புக்கும் ஒத்தகொள்கைகள் பண்டைத்தமிழ் நூற்களில் இருப் பதை, பாரதியார் பலப்பல மேற்கோள்களுடன் எடுத்துரைத்தது கேட்டுத்தமிழர் இன்புற்றனர். அஜானபாகுவான் பாரதியார், முறுக்கிவிடப்பட்ட மீசையும், முறுவலும் துலங்க, ஆரிய ஆபாசத்தைப் புட்டுக்காட்டி, "அட சனியனே!" என்ற ஆலாபனத் தை அடிக்கடி நடத்தியது, கேட்டு ரசிக்கமுடியுமே தவிர, ஏட்டில் எழுதி விளக்கமுடியாது. நகைச்சுவை ததும்ப, பொருட்சுவை பொலிவுற, உறுதியும் உத் வேகமும் மிளிர, பாரதியார் தமது பேருரையை யாற்றினர்.

"ஆம்! மிக வேகமான பேச்சு! அழகான ஆற்ற லுரை! ஆனல் அடிக்கடி நிகழ்வதில்லையே" என்று மக்கள் எண்ணினர்.

அவர்களின் குறைதீர, பேரன்பர் பாரதியார், இனி அடிக்கடி தமிழருக்கு விருந்தூட்டி, வீரம் செறிந்த நாட்டின் வேதனைதீர்க்க, அறப்போரை நடத்த முன்வருவாராக!

பெரியார்

என்றும், இன்ன ஐயர், ஸ்பெஷல் ஆபீசராக நியமிக் கப்பட்டு விட்டார் என்றும், மேலே இருந்து உத்தி ரவுவரும். இதைப்போல முன்பொருதடவை டாக்டர் வரதருஜுலு நாயுடுவுக்கு நடந்தது.

தமிழ்நாடு காங்கிரஸ்தனியாகப்பிரியட்டும். அகில இந்தியக் காங்கிரசுக்கும் இதற்கும் சம்பந்தம் இருக் கக் கூடாது. அத்தகைய நிலைமை உண்டானல், நாங் கள் காங்கரசில் சேர்ந்து, ஆச்சாரியாரைக்கூட எங் கள் இஷ்டம்போல் நடக்கச் செய்யமுடியும்.

பெரியாரின் சொற்பொழிவுக்கு, வியாக்யானம் தேவையா! நுணுக்கமான அரசியல் கருத்துக்களையும், பெரியார், மிக எளியமுறையில் விளக்கினர். ஏற் கனவே ஒரு முறை திருக்கழுக்குன்றம் வந்த பெரி யார், மழை காரணமாக அதிக நேரம் பேசமுடியாது போய்விட்டதால் திருக்கழுக்குன்றம் மக்கள் கவலை கொண்டிருந்தனர். மாநாட்டன்று அவர்களின் மன மகிழ, பெரியார் பேசினர்.

மாநாட்டில், "ஆச்சாரியாரின் திட்டம், பதவி ஏற்கும் மற்றோர்சூழ்ச்சி. திராவிடநாட்டுப்பிரிவினையை ஏற்றுக்கொள்ளாமுன்னம் ஆச்சாரியார் அமைக்க விரும்பும் தேசீய சர்க்காரில் ஜஸ்டிஸ்கட்சி சேரக் கூடாது" என்ற தீர்மானமும், "திராவிட நாட்டுப் பிரிவினைக் கொள்கை ஜஸ்டிஸ்-கட்சியின் மூலாதாரக் கொள்கையாக்கப் படவேண்டுமென்று, ஜஸ்டிஸ் கட் சிக்கு இம்மாநாடு சிபார்சு செய்கிறது" என்ற தீர் மானமும், நிறைவேற்றப்பட்டபோது, விசேஷ ஆர்வம் இருந்தது.

மாநாட்டுப்பந்தலில், ஆச்சாரியார், ஜனப் ஜின்ன வுக்குச் சலாமிட்டு நிற்பது படந்தீட்டப்பட்டு, மாட் டப்பட்டிருந்தது. மக்கள் அதனை மிகவும் ரசித்தனர்.

# சங்கராச்சாரியாருக்கு கருப்புக் கொடி!

பட்டுக்கோட்டை,

(நமது நிருபர்.)

'காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு' சங்கராச்சாரியார், தமது பரிவாரங்களுடன் பல்லக்கில் மே 14ந்உ காலை சுமார் 7-30மணிக்கு இவ்வூருக்குள் பிரவேசித்தார். அவ்வமயம், இவ்வூர் சு.ம. தோழர்களும், நீதிக்கட்சித் தோழர்களும் மற்றும் பல தமிழன்பர்களும் பொதுமக்களும் தங்கள் அதிருப்தியைத் தெரிவித்துக்கொள்ளும் முறையில் கருப்புக்கொடிகள் தாங்கி, ஊர்வலமாக நகரின் முக்கிய வீதிகள் வழியே சென்று சங்கராச்சாரியார் வருகையை எதிர்நோக்கி மதுக்கூர் ரஸ்தாவில் நின்று கொண்டிருந்தார்கள். சங்கராச்சாரியாரை பகிஷ்கரிப்பதற்காக கருப்புக்கொடி ஊர்வலம் ஏற்பாடாவதைக் கண்ணுற்ற செல்வாக்குள்ள பார்ப்பனர்சிலர், ஷை ஊர்வலத்தைத்தடுக்க சொந்தசெல்வாக்கை உபயோகித்தும் பயன் ஏற்படாது போகவே, பந்தோபஸ்துக்காக போலீஸ் உதவியை நாடி, போலீஸ் பந்தோபஸ்தும் செய்யப்பட்டது. கருப்புக்கொடி தாங்கி நின்ற தோழர்கள் சங்கராச்சாரியார்வந்ததும் அணிவகுத்து நின்று 'சங்கராச்சாரியாரே திரும்பிப்போம்' "வர்ணாச்சிரம ஆதிக்கம் ஒழிக" "பார்ப்பன ஆதிக்கம் ஒழிக" என்னும் வாக்கியங்களை ஒலித்துக்கொண்டு, முன்னே செல்ல அதன் பின்னல் சங்கராச்சாரியார், பார்ப்பனர் புடைசூழ, போலீஸ் பந்தோபஸ்துடன் பல்லக்கில்வர, ஊர்வலம் கடைசிவரை சங்கராச்சாரியாருடன், கோஷங்களை முழக்கிக்கொண்டு சென்று பின்பு அமைதியாகக் கலைந்தது. சங்கராச்சாரியாருக்கு இவ்வூரில் முதல் தடவையாக நடத்தப்பட்ட கருப்புக்கொடி ஊர்வலம் மிகவும் வெற்றிகரமாகவும், அமைதியாகவும் நடந்தேறியதைக் கண்டு தமிழர்கள் களிக்கிருர்கள்.



ஆச்சாரியார் பெரியார் சந்திப்பு 2 ம்பக்கத் தொடர்ச்சி

யோகத்துக்கு எடுத்துக்கொள்வார். திருப்பதி வெங்க டேஸ்வரர், நம்மவர் தலையைத்தானே மொட்டையாக்கி பட்டைநாமம் சாத்தி, வீதியிற் புரளவைக்கிருர்! பார்ப் பனரை, அர்ச்சகராக்கி, அவர்களது அணங்குகளுக்கு சிந்தாமணிச்சேலையும் சீமைக்கமல ஓலையும், மங்களூர் வளையும் மரகதத்திருகும், குங்கும நிறஜாக்கட்டும் கொண்டைக்குச் செண்டும் அளிக்கிருர். ஆரியமுறை அது! அதுபோலத்தான் ஆச்சாரியாரும் விபீ ஷண சரணகதியிலே, வீணருக்குப் பக்திபிரபாவத் தைத்தந்துவிட்டு, காரியத்துக்கு உதவும் கருத்தைத் தமக்கெடுத்துக்கொண்டார்.

இலங்கை, சொர்ணபுரி! தங்கக்கலசமுள்ள கோ புரங்கள், மரகதமணி பொதித்தமாளிகைகள், பொன் இழைத்த படிக்கட்டுகள் கொண்டதடாகங்கள், திரு, தாண்டவமாடும் தேஜோமயமானதேசம். இயற்கையழ கும், செயற்கைச்சிறப்பும்சேர்ந்து அந்தத்தீவை அலங் கரித்தது. அத்தகைய ராஜ்யத்துக்கு ஆபத்து நெருங் குகிறது! எண்ணித்தீர்க்க முடியாத பெருஞ்சேனை!வில் வீரன்இராமன்! அவன்தனது சொந்தசேனையைஅழை த்து வந்தானில்லை. இரவல்சேனை. அதுமுழுவதும் அழி யினும் கோசல நாட்டுக்கோமானுக்கு நஷ்டமில்லை எனவே, இராமன், கோடிக்கணக்கான வானர சேனை களைப் பிணமாகக் குவிக்கமுடியும்! அவ்வளவு உக்கிர மான சண்டையில் இலங்காதிபதி வீழ்ந்தேதீருவான். இராவணன் வீழ்ந்தால், அரசு, இராமனுக்கோ, இராம னுக்குதவிய வானரரில் யாருக்கேனுமோ போய்ச் சேரும். இராட்சத குலத்துக்கு இருந்த அரசு, போய் விடும். இந்த மாபெரிய நஷ்டத்தைத் தவிர்க்க வேண் டும். இதற்கென்ன செய்வது என்று யோசித்த விபீ ஷணன், இராவணன் மாண்டாலும், இலங்கை மாளா திருக்க, அண்ணன் முடியிழப்பினும் அயலார் முடி தரிக்காதிருக்க, தந்திரங்கண்டறிந்தான். "ரகுபதே, நான் தங்கள் தாசன். தமியேனைக் காத்தருள்க!" என்று கூறிக்கொண்டு, எதிரியை நேசனாகக் கொண் டான். போரில், இராவணன் வீழ்ந்தான், சிதறிய முடி, விபீஷணன் சிரம் சென்றது, இலங்காதிபதியாக தம்பி வந்தான், அண்ணன் மாண்டபின்.

இதைவிடச் சிறந்த ராஜதந்திர முறை அந்தச் சமயத்துக்கு வேறுஎவரும் செய்திருக்க முடியாது. இதைச்செய்த விபீடணன்,வீணனல்ல, துரோகியல்ல வைதீகப்பித்தனுமல்ல, காரியவாதி, தந்திரசாலி, அர சியல் யூகமுள்ளவன். இந்தரசத்தைத்தான் ஆச்சாரி யார் பருகிப் பரமானந்தம் அடைந்திருப்பார் அந்தச்சி றைச்சாலையிலே.

ஆகவேதான் அவர், சிறையை விட்டு வெளி வந்ததும், அஹிம்சையை அழித்தார், காந்தியாரைத் துறந்தேனென்றுர். நாம் அவரைக் காந்தியாருக்குத் துரோகி என்றோம், ஆனல் விபீஷண வேதியர், பிரிட்டிஷ் பக்தி காரணமாகவோ, காந்தியார் மீது துவேஷங்கொண்டோ, சரணகதி அடையவில்லை. விபீடணன் இலங்கையைப்பெறத் தந்திர முறையைக் கையாண்டதுபோலவே, ஆச்சாரியார், பதவியைப்பெற, இந்தப் பாசாங்கு செய்தார். பலிக்கவில்லை.

உடனே இரண்டாம் முறை தமிழகத்தைச் சுற் றினர். , பழயபேச்சை விடுத்தார். புதுப்பாடலைத் துவக்கினர்.

இதோ இப்போது மூன்றும் முறை நடக்கிறது சுழல் சுற்றுப் பயணம்.

காங்கிரசைவிட தேசம் பெரிது.
அஜாதைவிட ஜின்ன பெரியவர்.
ஜப்பானியரைவிட பிரிட்டிஷார் நல்லவர்கள்
லீகை எதிர்ப்பது கூடாது.
பாகிஸ்தான் மறுப்பது பேதமை.
கூட்டாக ஆள்வதே முறை.
காங்கிரசையும் எதிர்ப்பேன்..
காலத்துக்கேற்றபடிகருத்தை மாற்றவேண்டும்
காரியம் பலிக்க, வீரியம்பேசிப் பயனில்லை.

—இவைகள், இம்முறை ஆச்சாரியார் திருவாய் மலர்ந்தருள்பவை!!

"விபீஷணன் என்ன? இராவணனே வந்தாலும் நான் ஏற்றுக்கொள்வேன் என்று ஸ்ரீராமச்சந்திரர் கூறினர், என்று பக்திமான்கள், கண்களில் நீர்மல்கக் கூறுவர். கண்களில் நீர் ஊறும் அளவுக்குக்கருத்தில் பகுத்தறிவு சுரப்பதில்லை அவர்களுக்கு. இராமன் விபீடணனை வரவேற்றது, மற்றோர் ராஜதந்திரம்.

யுத்தம் புதியகளம், மாயாஜாலப் போராட்டக் காரர் இராவணதியர். அவர்களின் போர்முறையும் தந்திரமும் புகல, விபீடணனை விட வேறுயாரால் முடியும்! அத்தகைய உளவாளி—மன்னனின் தம்பி கிடைப்பதென்றால், போர்வெற்றிகரமாக முடியும், என்பது இராமனுக்குத்தெரியும். குவிஸ்லிங் கிடைத் ததும் நார்வேயை நாசமாக்க ஹிட்லரால் முடிந்தது! இலங்காதிபதியின் வீழ்ச்சிக்கான வழிகளை விபீடண னிடம் தெரிந்துகொள்வோம் என்றே இராமன் விபீ டணனை வரவேற்றார். காங்கிரசைக்கருவறுக்க, காந்தி யாரைக் கவிழ்க்க, போர்முறைகள் என்ன, தந்திரங் கள் யாவை என்பதை, ஆச்சாரியாரைத் தவிர வேறு யாரால் திறம்பட எடுத்துரைக்க இயலும்! எனவே காங்கிரசல்லாதாருக்கு ஆச்சாரியார், நன்கு பயன்படு வார்—சரியானபடி உபயோகித்தால்!!

வடநாடு வேறு, தென்னடு வேறு, என்பதை ஆச்சாரியார் நன்குணர்ந்துள்ளார். தென்னட்டில் உல வும் ஆரியத்திருப்பிரம=மங்கள், திராவிட இனத்தை அடிமைகளாக்கியுள்ளதும் அவருக்குத்தெரியும்.

பாகிஸ்தானுக்கு இணங்குவதனல், ஆரியருக்கு நஷ்டம் இல்லை. ஆரியரின் செல்வாக்கு முஸ்லீம்க ளிடைகிடையாது. இஸ்லாம் என்ற கோட்டைமீது ஆரியம் மோதி, மண்டைசிதறி, மண்ணில்குருதி கொட்டி, பின்வாங்கி உயிர்பிழைத்து இருக்கிறது. ஆரியத்தரகு, ஆரியப்புரோகிதம், ஆரியமேல் ஜாதித் திமிர், ஆரியமௌடீகம், ஆரிய கடவுட்கொள்கை ஆகிய எதுவும் இஸ்லாமியர் இருக்கும் திக்கையும் திரும்பிப்பார்ப்பதில்லை. எனவே பாகிஸ்தான் கொடுத் துவிடுவதனல், ஆரியருக்கோர் நஷ்டமும் கிடையாது. திராவிடஸ்தான் கிடைத்துவிட்டால் மட்டுமே, ஆரி யருக்கு இன்றுள்ள, உயர்ஜாதி நிலைமை, ஊர் உழைப் பை உறிஞ்சும் உரிமை, உன்மத்தராக்கும் மதத்தைப் போதித்து ஊராண்டகூட்டத்தை அடிமையாக்கும் கொடுமை ஆகியவைகள் அடியற்ற பனைபோல் சாய்ந் துவிட, ஆரிய ஆதிக்கம், மடுவைவிட்டு வெளிவந்த முதலை மக்களால் அடித்துக்கொல்லப்படுவதுபோல், மாண்டொழியும்.

இதைத்தெரிந்துதான் ஆச்சாரியார், பாகிஸ்தான் வேண்டுமானல் தருவோம், திராவிடஸ்தானைப்பற்றி மூச்சும் விடக்கூடாது என்று தீர்மானித்திருக்கிறார்.

ஆனல், அவர் ஏமாறுவார்! நாலவதொருமுறை அவர் நாட்டிலே சுற்றி, ஆரியர்மீது திராவிடருக்கு, யூதர்மீது ஜெர்மானியருக்கு உண்டானதைப்போன்ற துவேஷம் வளருமானல் ஆபத்தாக முடியும், எனவே திராவிடநாட்டுப்பிரிவினையை நாம் எதிர்க்கலாகாது, இந்நாடு உண்மையில் திராவிடருடையது, நாம் இங்கு குடிபுகுந்தகூட்டம் என்பதில் சந்தேகமில்லை இத்தனைகாலம் எதை எதையோகூறி ஏய்த்தோம், கொடிகட்டி ஆண்டோம் "தேவர்கள் மந்திர ஆதீனத்தில் இருக்கின்றனர். மந்திரம் பிருமண ஆதீனத்தில் இருக்கிறது. எனக்கு அந்தப் பிருமணரே கடவுள்" என்று கண்ணன் கீதையிற் கூறியதாகக்

கூறினேனும். இப்போது அதைக்கேட்பாரில்லை. ஆகவே நமது நிலைபை உணர்ந்து, நாட்டினருக்கு அடங்கி இருப்போம் என்று தமிழகத்தில் ஆச்சாரியார் பேசுங் காலம் பிறக்கப்போகிறது.

நாற்பது நாட்களுக்குமுன்வரை, பாரதமாதாவை வெட்ட ஆச்சாரியார் சம்மதிப்பார் என்று காங்கிரஸ் கூட்டத்திலே யார் எண்ணியிருக்கமுடியும்! ஆச்சாரி யார், அவிபக்த குடும்ப சொத்துப் பிரிவினைபற்றியும், அபுல்கலாம் அஜாதின் செல்வாக்கு சூன்யம்பற்றியும், பாகிஸ்தான் விளக்கம் பற்றியும், காங்கிரசைவிட தேசம் முக்கியம் என்பதைப் பற்றியும், பேசுவதை இப்போது அந்தக் காதுகள் கேட்கவில்லையா! இன் னமும் அந்தச்செவிகளுக்கு, திராவிடநாடு என்றதும் தீபோல் இருக்கலாம். நினைத்தால் நெஞ்சு எறியலாம்! அவர்களுக்கு ஆச்சாரியார் பேச்சிலே ஒருபாகம், பரிசு தருகிறேன். கொட்டை எழுத்தில் எழுதிவைத் துக்கொண்டு, நித்திய பாராயணம் செய்யக் கோரு கிறேன்!

“சிலபதார்த்தங்களைச்சிலசமயங்களில் பிரிக்கலாம் சிலவற்றை எப்போதும் பிரிக்கமுடியாது. இதோ கடிகாரமிருக்கிறது. இதைப்பிரித்தால் கெட்டுவிடும். வேறுசில பொருள்களைப்பற்றி அப்படிச்சொல்வதற் கில்லை.

**பிரித்துத் தீரவேண்டும் என்றல் பிரித்துத்தான் ஆக வேண்டும் எல்லாம் சமய சந்தர்ப்பங்களைப் பொறுத்தது**

இது ஆச்சாரியார், மே 17ல், சென்னை புது காங்கிரஸ் மாளிகையில் பேசியது.

“இவர் கிடக்கிறார் சார்! இவரைவிடக் காங்கிரஸ் பெரிது! அது எதிர்க்கிறது பாகிஸ்தானை” என்று கூறும் சில கதர் சட்டைகள்!

கேளுங்கள் கதர் தாசர்களே, உங்கள் தலைவர் “**காங்கிரஸ் பெரிது. நீ பிரஸ்தியாலும் பெரிசல்ல என்று சிலர் சொல்கிறர்கள். அந்தக் காங்கரசை எனக்குத் தெரியும்**” என்று கூறுகிறார்.

“காந்தியார் இருக்கிறார்! அவரே பெரியவர்” என்று கூறுவர் சிலர். ஆச்சாரியார் ‘**காந்திஜீ ரொம்ப கெட்டிக்காரர் நானும் கொஞ்சம் கெட்டிக்காரன்தான்**” என்று கூறுகிறார்.

தலையிலே வைத்துள்ள கையைக் கீழே இறக்கு காங்கிரஸ்தோழா! கண்களைத்துடைத்துக்கொள், நெஞ் சிலே கை வைத்துச்சொல், திராவிடநாடுவேண்டுமா, வேண்டாமா! காங்கிரசும் காந்தியும் எம்மாத்திரம் என்று துணிந்து கூறும் அந்த ஆரியத்தலைவரின் பேச்சைக் கேட்டுக் கொண்டு, ஜனப் ஜின்னாவைத் தூற்றினாய், லீகைப்பழித்தாய், பாக்கிஸ்தானை எதிர்த்தாய் ,காங்கி ரசே கோயில், காந்தியே கடவுள், ஆச்சாரியே பிர தம பூஜாரி என்று பிதற்றினாய், பார் இப்போது, காந்தியும் காங்கிரசும் ஆச்சாரியார் கொடுக்கும் உதை யிலே கரணம் போடுவதை. என்மீது கோபியாதே தம்பி! ஆச்சாரியாரே கூறுகிறார், “காங்கிரசை அடித் தால்கூட என்னால்தான் அதற்குஉதவி. விஷ்ணுவை ஒரு பக்தன் உதைத்தார். அதனால் மார்புகரையா யிற்று, அதைப்பெருமையாக மதித்து மஹாவிஷ்ணு அந்தககரையைக் காப்பாற்றி வருகிறார்.” ஆரியர், காங்கிரசை உதைக்கலாம், ஊராள அதுசெய்யவேண் டுமானல். நீ ஏனப்பா, அங்கோர், கொடிதூக்கியாக, இருக்கிறாய். வெட்கம்இல்லையா உனக்கு! வாவெளியே!

காங்கிரசை மட்டுமல்ல, கதரணிந்த தோழனே, “கடவுளை” க்கூட ஆரியர், எதுவேண்டுமானலும் செய்வர், அந்தக்கடவுளும், அவர்கள்எதுசெய்தாலும், அவர்களைத்தானப்பா காப்பாற்றுமாம். அது அவர்கள் புராணம்.

தனது இருகண்களையும் பெயர்த்தெடுத்து, இரத் தம் இலிங்கத்தின்மீது சொட்டச் சொட்ட நின்றார் கண்ணப்பர்! கண்ணிருந்த இடத்திலே புண்ணிருக்க, கரையும் உள்ளத்தோடு நின்றபோது சிவனார் கூறின ராம், “நில்லு கண்ணப்பா! நில்லு கண்ணப்பா!!” என்று. அப்பா என்று கண்ணப்பரையும், அம்மே என்று காரைக்காலம்மையாரையும், சிவனார் அன்பு ததும்ப அழைத்தார். இருவரும் பார்ப்பனரல்லாத பக்தர்கள், தெரியுமா! இந்தப்பெருமை பார்ப்பன பக் தர் எவருக்கும் உண்டானதில்லை, என்று முருகன் சந்தம் பாடிடும், மாஜி சுயமரியாதைச் சிந்துக்கார தோழரொருவர்கூறினர். தோழனே! நான்வியந்தேன், உன்னைப்போலவே. பிறகே யோசித்தேன்! காரைக் காலம்மையார், உடலும் எலும்பும் தேய உருண்டு பெற்ற அந்த ‘அருளை,’ கண்ணப்பர் கண்ணைப்பிடுங் கிக்காணிக்கையாகத் தந்துபெற்ற ‘கருணை’ யை, ஒரு பார்ப்பனர், மிகமிக எளிதிலே பெற்றார் என்று திரு விளையாடற் புராணம் கூறுகிறது.

குலோத்துங்க பாண்டியன் நாளாம்! அவந்தி நகர் பார்ப்பனனொருவன், அடாதன செய்தானும். யாதோ அஃது! களவா? அதைவிடக் கொடிது! கொலையா? அதனினும் கொடிது. கள்ளுண்டானா? மிகமிகக்கொடிது. மாதாவைப் புணர்ந்தான்! பிதாவைக் கொன்றான்!! பாலூட்டிய தனத்தைப்படுக் கைக்கு உபயோகித்த பாதகனை, சிவபெருமான், மீனாட்சியம்மையுடன் வேட வடிவு தாங்கிக்கொண்டு, மதுரையில்வந்திருந்து, வைகறைத்துயிலெழு, பசுவுக் குப் புல்லிடு, திருக்கோயிற் குளத்தில் தீர்த்தமாடு, 108 முறை நம்மை அங்கப் பிரதட்சணம் செய், இம்மாபாதகம் தீரும் என்றருளிச் சென்றார். மூன்றே மாதம், தோழா, இந்தப் பார்ப்பனன் சிவன் கூறியன செய்து, மாபாதகம் நீங்கித் தெய்வப் பிரமண வடி வானனும்!!

“இக்கொடும் பெரும் பாவிக்கா இவ்வருள்” என்று மீனாட்சியம்மையும் கேட்டனராம். கருணையின் காட்சி கூறினராம், “நீ அறியாய் மீனாட்சி! இத்த கையோனைக் காப்பதே காப்பு” என்று!

ஆமாம்! தோழனே! காங்கிரசோ, அந்தக்கடவுள் களோ, எல்லாம் ஆரியசிருஷ்டி! ஆகவே அவர்களுக்கு அவை பயன்படும். உனக்கு ஏனப்பா அவை!!

**எல்லாம் சமய சந்தர்ப்பத்தைப் பொறுத்தது** என்று ஆச்சாரியார் கூறி யிருப்பதன் கருத்தை உணரு. சமயம் வந்தால், காந்தி, காங்கிரஸ், கற்பனைக்கடவுள், சாத்திரம், மதம், எதையும் அவர்கள் தூக்கி எறிவர். எதற்கும் நீ சுமை தாங்கி! இங்கிலே போகத்தான், திராவிட நாடு தேவை என்கிறேன், இப்போதும் காரியம் மிஞ்சிவிடவில்லை, நன்றாக யோசித்துப் பார்! யோசித்தால், நீ திராவிடர் கட்சிக்கு வந்து சேருவாய். உன் போன்றாரும் வந்து விட்டால், பிறகு திராவிட நாட்டுப் பிரிவினைப் பிரச்னை மிகமிகப் [illegible] மடையும். சமய சந்தர்ப்பந்தெரிந்த ஆச்சாரியார், அந் நாளில், பெரியாரைச் சந்தித்து, “திராவிட நாட்டுப் பிரிவினைக் கொள்கை சரியானதே. அதை நான் மறுக் கவில்லை. ஆனல், ஆரியர்கள், திராவிட நாட்டிலேயே இருக்கக்கூடாது என்று சிலர் கூறுவதைக்கேட்டு என் மனம் துடிக்கிறது. அதை மட்டும், விட்டுவிட்டு சொல்லும்” என்று கேட்க “ஆஹா! ஆகட்டும்! ஆரி யர்களும், உழைத்து உண்டு, எல்லோருடனும் சம மாக இருந்து வாழட்டும்.” என்று பெரியார் அபயங்கூறக் கேட்டுக் களிப்புறுவோம்.

**எப்போது அந்தக்காட்சி கிடைக்கும் என்று என்னை கேட்காதீர்கள் காட்சியை நான் தீட்டினேன் வருடம், மாதம் தேதி. தீட்டவேண்டியது நீங்கள்! ஆம்! இரத்தத்தை மை யாக்கித்தான் தீட்டவேண்டுமென்றாலும் தயங்கக்கூடாது!!**

Printed at the United Printing Works, Hodgsonpet Conjeeveram.
and Published by C. N. Annadurai, M. A. at 51 Nimanthakara Street, L Conjeeveram.

